இந்தியன் பாங்கின்
ஓய்வுகால திட்டத்தின்
மூலம் எப்பொழுதும்
இளமையுடன் திகழலாம்

"இதோ என்னைப் பார் —ஓய்வு பெற்றுள்ள. இந்த நிலையிலும் நான் சுகமாகவும் நிம்மதியாகவும் வாழ்ந்து வருகின்றேன். நான் உரிய காலத்தில் செய்த சேமிப்பு இப்போது பேருதவியாக அமைந்துள்ளதை காண்கிறேன்.

இந்தியன் பாங்கின் ஓய்வு காலத் திட்டம் ஒரு சிறப்புள்ள திட்டமாகும்.

நான் வருவாய் பெற்று வந்தபோது மாதம் ரூ. 100 வீதம் 144 மாதங்கள் சேமித்தேன். தற்போது இந்தியன் பாங்க் பிரதி மாதமும் ரூ. 299/- எனக்கு அளிக்கிறது.

இப்படி அவர்கள் 180 மாதங்கள் வழங்கி வருவார்கள் —15 ஆண்டு காலத்திற்கு நிம்மதியான ஓய்வு.

நீயும் என்னை பின்பற்று. மாதம் ரூ. 300/- சேமிக்கத் துவங்கினால் பிற்பாடு மாதம் ரூ. 897 கிடைத்துவரும். எப்பொழுதும் இளமையுடன் திகழலாம்.

ஒவ்வொருவரின் தேவைக்கும் ஏற்ப இந்தியன் பாங்கில் ஏழு வகையான சேமிப்புத் திட்டங்கள் உள்ளன என்பதையும் மறவாதே."

உங்கள் அருகாமையில் உள்ள கிளையுடன் தொடர்பு கொள்க.




# இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)

தலைமை அலுவலகம்:
17 வடக்கு கடற்கரைச் சாலை, சென்னை-600 001

**இந்தியாவெங்கிலும் உள்ள கிளைகள் மூலம்
உங்கள் நலனில் அக்கறை காட்டும் பாங்க்**



# இப்போது! வறுத்தெடுக்கும் கோடை நாட்களில் குளுமையாகப் புதுமலர்ச்சியுடன் விளங்குங்கள்

மற்றொரு மின்வெட்டு! இக் கோடை மிகவும் கடுமையாகவும், வெப்பமாகவும், இருக்கப்போகிறது. ஆனால் கவலைவேண்டாம்; அப்போது குளுமையாகப் புது மலர்ச்சியுடன் விளங்கிட இதோ ஒரு புதிய வழி. நீங்கள் குளித்தவுடன் உடம்பு முழுவதும் ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடரைத் தூவிக்கொள்ளுங்கள். ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடரில் மட்டுமே அடங்கியுள்ள **மென்தால்** உங்களுக்குக் குளுமையும் புதுமலர்ச்சியும் அளித்து, கோடையில் உரசுவதால் ஏற்படும் புண்ணிலிருந்தும், வேர்க்குரு-விலிருந்தும் உங்கள் சருமத்திற்கு சுகமளிக்கிறது.

கோடைகால நாட்களைக் குளுமையுடன் கழியுங்கள். ஜான்ஸன்ஸ் மென்தொலேட்டெட் பவுடர் உபயோகியுங்கள்.

# ஜான்ஸன்ஸ்* மென்தோலேட்டெட் பவுடர்

75 கோடையில் மென்தால்-குளுமை தரும் ஒரே பவுடர்.




Johnson & Johnson*

OBM 4320

# ஸம்மர் ஜோக்ஸ்!

கோடை தந்த பரிசு வறட்சி. அந்த வறட்சி தந்த பரிசு வறட்சி நிவாரணப் பணி! அரசின் வரலாறு காணாத வறட்சி நிவாரணப் பணியில் வளம் கண்ட மக்கள், ஆண்டுதோறும் இம்மாதிரி வறட்சியே வரட்டும், வளம் வேண்டவே வேண்டாம் என்று வேண்டி நின்றாலும் வியப்பதற்கில்லை!



''என்ன ரேகா...என்ன கோலம் இது?''

''ஸ்டுபிட்! இதுதான் லேட்டஸ்ட் ஸம்மர் 'பாஷன்!''






''ஸாரி! எக்ஸ்கியூஸ் மி ஸார்! டோபி பாண்ட் மட்டும்தான் கொடுத்தான். வெய்யில் தண்ணீர்ப் பஞ்சமாம்!''

''இதெல்லாம் சொல்லிக் கொண்டு என் முன்னாலே நிற்க வேண்டாம்! பேசாம நடையைக் கட்டி வீட்டில் போய் உட்காரும்!''




தண்ணீர்ப் பஞ்சம் நிலவும் தருணமிது
சென்னையில் இதுவும் நடக்கலாம்!
ஐயயா.. திருடன்!.. திருடன்!...


மகன்: பூஜை செய்யும்போது மணி ஏம்பா அடிக்கிறாங்க?
தந்தை (தீ அணைப்பு அதிகாரி): கற்பூரம் தீப் பிடிக்க எரியுதுல்லே. அதனாலேதான் மணி அடிக்கிறாங்க!
M.F.S


"பவர் கட்டிலேயும் உங்க வீட்டு ஃப்ரிஜ்லே ஐஸ் வாட்டர் எப்படிக் கிடைக்குதுன்னு பார்த்தேன். இப்பல்ல புரியுது ரகசியம்!"


அப்பா என்ன வெயில்!





# 50,000 ரூபாய் மதிப்புள்ள பரிசுகள் பெறுங்கள்

## பாரியின் 'ஏற்ற தருணம் எது' போட்டியில்

2 முதற் பரிசுகள் — ரூ 10,000 மதிப்புள்ள நகைகள். உங்கள் விருப்பம் போல்

2 இரண்டாவது பரிசுகள் — ரூ 5,000 மதிப்புள்ள நவீன குக்கிங் ரேஞ்ச் அல்லது ரெப்ரிஜிரேட்டர்

50 ஆறுதல் பரிசுகள் — ரூ 400 மதிப்புள்ள காஞ்சீபுரம் பட்டுச்சேலைகள்





முழு விவரங் களடங்கிய
நுழைவுத்தாட்கள்
உங்கள் அருகாமை
யிலுள்ள பாரி
விற்பனை
யாளரிடம்
பெறுங்கள்.

பாரியின் 'ஸ்வீட் பாங்க்'
தரமான பாரி மிட்டாய்கள் அடங்கியது.
கண்ணைக் கவரும் ஆறு அழகிய
வண்ணங்களில். 450 கிராம்
மிட்டாய்களுக்கு
விலை ரூ 12 தான்!

முந்துங்கள்!
போட்டி
முடியும் நாள்
ஜூன் 15,
1975

பாரீஸ்
கன்பெக்ஷனரி
லிமிடெட், சென்னை



SAA/PRS/1665

# கல்கி

ராக்ஷஸ வைகாசி 25
ஜூன் 8, 1975


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே! சம்பவங்களும் கற்பனையே.



## ராஜீ-ரோஸி












கல்கி

மலர் 34

இதழ் 45





# எழுச்சி தினமாம்! ரொம்ப மகிழ்ச்சி!

சேலம் இரும்புத் தொழிற்சாலை விஷயத்தில் மத்திய அரசு அநாவசியக் காலதாமதம் செய்கிறது : எனவே ஜூன் 15ந் தேதி எழுச்சி தினம் என அறிவித்துள்ளது தி.மு.க. மகிழ்ச்சி, மகிழ்ச்சி !

கோட்டையில் மந்திரிகள் அறைக்குப் பக்கத்திலேயே பில்லைச் சேவகர் முதல் உயர் அதிகாரிகள் வரை பலர் உள்ளங் கைகளைச் சொறிகிறார்களே ! தமிழகமெங்கும் தி.மு.க. ஆட்சியில் ஏகமாகப் பரவியுள்ள லஞ்சப் பேயை அடித்து விரட்ட என்றைக்கு எழுச்சி தினம் ? தி.மு.க. தலைவர் தெரிவிக்கட்டும்.

காவிரி நீர்ப் பிரச்னையில் தமிழகத்துக்குத் துயர் தரும் முடிவுகளைக் கர்நாடகம் மேற்கொள்ளாமல் அடித்துப் பேச மத்திய அரசால் முடியவில்லை. இந்தத் துணிவின்மையைக் கண்டிக்க இப்போது எழுச்சி தினம்.

பெரும் புள்ளிகள் முதல் சாதாரண வட்டங்கள் மாவட்டங்கள் வரை தி.மு. கழகத்தினர் அரசாங்க அலுவல்களில் தலையிட்டு அதிகாரிகளை அச்சுறுத்திக் காரியங்களைச் சாதிக்கின்றனர். இதற்கு முடிவுகட்ட எப்போது எழுச்சி தினம் ?

கன்யாகுமரிக்கு ரயில் பாதை போடுவதில் மத்திய அரசின் மந்தப் போக்கு — எனவே எழுச்சி தினம் என்கிறது தி.மு.க.

அனல் மின் நிலையங்களைப் பாதுகாப்பதில், மின் உற்பத்தி, விநியோகத்தில் ஏற்படும் நஷ்டங்களைத் தவிர்ப்பதில் தமிழ்நாடு மின் வாரியம் காண்பித்துள்ள சிரத்தைக் குறைவை மறக்கலாமா ? தயங்காதீர்கள்! இதற்கும் ஓர் எழுச்சி தினம் தேவைதான் !

நெய்வேலியில் இரண்டாவது சுரங்கம் வெட்டுவதில் மத்திய அரசின் ஏனோதானோ மனப்பான்மையாம் — எழுச்சி தினத்துக்கு ஏற்பாடு நடக்கிறது.

சென்னையில் ராஜாஜி பாலம் என்று பெயர் மாற்றத்துக்குள்ளான மன்றோ பாலத்தை அகலப்படுத்துவதில் ஏற்பட்டு வரும் காலதாமதத்தைவிடவா? அதன் அருகே, படகு ஓட்டப் பல கோடிகளை விழுங்கிய கூவத்தில் எருமைகள் குளிக்கின்றனவே. இது போன்ற நிலைமைகளைச் சீர்ப்படுத்த டாக்டர் கலைஞரின் எழுச்சி தின அறைகூவலை எதிர்பார்க்கிறோம்.

கல்பாக்கம் அணுமின் நிலையம் என்றைக்கு இயங்கத் தொடங்கும் என்று யாருக்குமே புரியாத நிலை. சுறுசுறுப்புக் காட்டாத மத்திய அரசுக்கு விழிப்பு ஏற்படுத்த எழுச்சி தினம்.

இந்த ஆண்டு கல்வித் திட்டம் என்ன என்பது தமிழக ஆசிரியர்கள் யாருக்குமே விளங்கவில்லை. இந்தக் குழப்ப நிலையை நீக்கத் திரு நெடுஞ்செழியன் தலைமையில் ஓர் எழுச்சி தினம் நடக்கலாமே?

சேது சமுத்திரத் திட்டத்தைத் துரிதப்படுத்த ஜூன் 15ந் தேதி எழுச்சி தினம் !

அசட்டு உத்தரவால் ஏறிய அரிசி விலையை இறக்க என்றைக்கு எழுச்சி தினம் ?

கிருஷ்ணாநதி நீர் சென்னைக்கு வர வேண்டும் என்பதை மத்திய அரசுக்கு உணர்த்த எழுச்சி தினம் அறிவித்தவர்கள்,

வள்ளுவர் கோட்டம், கட்டபொம்மன் கோட்டை, பூம்புகார் போன்ற உற்பத்திக்கு உதவாத செலவினங்கள் இப்போதைக்கு வேண்டாம் என்பதில் எழுச்சி பெறட்டும் !

மாற்றுக் கட்சி ஒன்று இங்கு ஆட்சியில் இருப்பதால்தான் தமிழகம் பொறுத்தவரை மத்திய அரசு நத்தை வேக மனப்பான்மை பெற்றுள்ளது என்று யாரும் நினைக்குமாறு புதுதில்லி நடந்து கொள்ள வேண்டியதில்லை !

வேற்றுக் கட்சி பதவியிலிருந்தால் தமிழகத்தின் நிலை இத்தனை மோசமாயிராது என்று யாரும் எண்ணுமாறு தி.மு.க. அரசு நடந்து கொள்ள வேண்டியதில்லை !

# ஓரியண்ட்






டெஸ்க் மின்விசிறி

## வலிமை மிக்கது
## ஓசையற்றது
## நம்பிக்கை வாய்ந்தது

ஓரியண்ட் மின்விசிறிகள் நவீன மோஸ்தரில் கட்டப்பட்டுள்ள வீடுகள், ஆபீஸ்கள் மற்றும் அலுவலகங்களின் எழிலுக்கு ஏற்றவாறு இணைந்து பரிமளிக்கும் வகையில் அற்புதமாக உருவாக்கப்பட்டுள்ளன. உங்களுடைய குறிப்பிட்ட தேவைகளுக்கு தகுந்தவாறு பற்பல விதங்களில் கிடைக்கின்றன—ஸீலிங், டேபிள், டெஸ்க், ஸ்டாண்ட், ஆல் பர்ப்பஸ் மற்றும் எக்ஸ்ஹாஸ்ட் மாடல்கள்.

இந்தியாவின் மிகச் சிறந்த அனுபவமிக்க மின் விசிறி தயாரிப்பாளர்களால் தேர்ந்து அளிக்கப்படும் எல்லாவிதமான ஓரியண்ட் மின் விசிறிகளும் அவற்றின் ஈடிணையற்ற சிறப்புத் தன்மைகளுக்கு இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் பெயர் பெற்றவை.

எல்லா மின்விசிறிகளும் இரண்டு வருட உத்தரவாதம் உள்ளவை.

**மிக அதிக அளவில் விற்பனையாகும் பெருமை மிக்க தினுசுகள்.**



சூப்பர் டீலக்ஸ் டேபிள் மின்விசிறி



ஸ்டாண்ட் மின்விசிறி



டீலக்ஸ் டேபிள் மின்விசிறி



ஆல் பர்ப்பஸ் மின்விசிறி

## ஓரியண்ட்
## விசிறி

உலக முழுவதும் தேர்ந்தெடுக்கப்படுபவை

ஓரியண்ட் விசிறி

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், 6, கோர் பிபி லேன், கல்கத்தா-54

தொழிற்சாலைகள் : கல்கத்தா, பரிதாபாத்.

CC-O-4/73



பெப்பே!
நீதிமன்றம்



வா, வா, எங்கே போறே...
இந்திரா காங்கிரஸ் பண பலம்
வோட்டு
குஜராத்

# இந்தியாவில் தயாரிக்கப்பட்டது அகில உலகுக்காக... உங்களுக்காகவும்.

FRANCE

SPAIN

## புதிய பிரின்ஸ் டீலக்ஸ் 4 இந்தியாவிலேயே அதிக விற்பனையுள்ள டிரான்ஸிஸ்டரின் ஏற்றுமதித் தரமுள்ள மிகச் சிறந்த மாடல்....

புதிய பிரின்ஸைக் கேட்டுப் பார்த்தீர்களா? அகில உலக நிலையங்களைப் பிடிக்கும் இந்த இந்திய போர்ட்டபிள் டிரான்ஸிஸ்டருக்கு வெளி நாடுகளில் ஏன் இவ்வளவு கிராக்கி என்பது புரியும். வெளிநாட்டினர் போற்றும்படி பிரின்ஸ் டிரான்ஸிஸ்டரின் சிறப்புகள் என்ன? நீங்கள் விரும்பும் ஒலியைத் தேர்ந்தெடுக்கவும், ஒலியின் வெவ்வேறு தரங்களைப் பெறவும், விசேஷ ஐ.எஃப். சர்க்கியூட் உள்ளது. கூடவே, நம்பகமான ஸாலிட்-ஸ்டேட் சாதனத்தின் சக்தி. உயர் திறன் படைத்த 10 செ.மீ. ஆழமுள்ள ஸ்பீக்கர். அதிக தடித்த, தூய செப்பு ஏரியல். 700 மி.வா-க்கும் அதிகமான கேட்கும் சக்தி. பாட்டரியின் சக்தி (வோல்டேஜ்) குறைவாக உள்ளபோதும், உரக்க, தெளிவாகக் கேட்க டயோடு. இவை மட்டுமா? இதன் பெயருக்கேற்றபடி அலங்காரமான அழகிய தோற்றம்.

இன்றே பிரின்ஸ் டிரான்ஸிஸ்டர் வாங்கி மகிழுங்கள். உலகெங்கிலுமுள்ள தரமறிந்த நேயர்கள் இதைத்தான் செய்கிறார்கள்.

**பிலிப்ஸ்**

**எதை வாங்கினாலும் சிறந்ததையே வாங்குங்கள்.**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

CMPR-318-165 TM

# என்ன சேதி?

## போச்சு! போச்சு!

'ஆரியபட்டர்' புஸ்வாணமாகி விட்டது. ஆனால் அதன் மீது நமக்குக் கோபம் இல்லை. விஞ்ஞான சோதனைகளே இப்படித்தான். பிரமாதமாய் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் போது கருணையின்றி காலை வாரிவிட்டுவிடும். எனவே, போனால் போகட்டும் எனலாம். ஆனால் அது ஐந்து நாட்களுக்குப் பிறகு வேலை செய்யாததை முப்பத்தைந்து நாட்களுக்குப் பிறகு வெளியிட்டார்களே, அதை மன்னிக்கவே முடியாது!

ருஷ்ய ராக்கெட்டில் வைத்து விண்வெளிக்கு அனுப்பியதால் நமது விஞ்ஞானிகளும் ஆட்சியினரும் ருஷ்யக் கம்யூனிஸ்டுகளாகவே மாறி விட்டனரா? இந்தியாவில் இன்னும் ஜனநாயகம் அடியோடு செத்து மடிந்து விடவில்லை என்பதை மறந்து விட்டனரா?

ஐந்து நாட்களுக்குப் பிறகு ஆரியபட்டர் வேலை செய்யவில்லை என்பதை ஆறுவது நாள் தெரிவித்திருந்தால் நமது விஞ்ஞானிகள், மத்திய அரசின்பால் நமக்கு மதிப்பு குறைந்திருக்காது. மாறாக ஜனநாயகப் பண்பு காத்ததை எண்ணி மகிழ்ந்திருப்போம். இப்போதோ —

ஜனநாயகப் பண்பும் போச்சு; விஞ்ஞானிகள், மத்திய அரசின்பால் நமக்கு மதிப்பும் போச்சு!

## ஐயோ பாவம், சர்மா!

ஐயோ பாவம், சங்கர் தயாள் சர்மா! இந்தோருக்கு வந்த அவரை யாரும் மதிக்கவில்லை, வரவேற்கவில்லை, லட்சியம் பண்ணவில்லை. இன்னார் என்று புரிந்து கொள்ளக்கூட இல்லை!

அந்த அளவுக்குத் தாம் ஜகத் பிரசித்தி பெற்றிருப்பதை சர்மா வெளிக் காண்பித்துக் கொள்ளாமல் கம்மென்று இருந்திருக்கலாம். நகைப்புக்கு இடமில்லாமல் போயிருக்கும். ஆனால் அவருக்கு அந்தச் சாணக்கியம் தெரியவில்லை. கோபத்துடன் தில்லிக்கு விமானம் ஏறிவிட்டார். விஷயம் அம்பலமாகி, இதோ சிரிப்புச் சிறப்பிதழிலும் இடம் பெற்று விட்டது!

## பட்டம் விடவா பட்டம்?

இந்தியப் பல்கலைக் கழகங்களின் டாக்டர் பட்டங்களுக்குப் பிரிட்டனில் இனி அங்கீகாரம் கிடையாது என்று முடிவாகியுள்ளது.

உடனே பிரிட்டன் மீது சீறுவதற்குப் பதில் கொஞ்சம் ஆத்ம பரிசோதனை செய்துகொள்ள வேண்டும். சிறிது காலத்துக்கு முன் மேல் படிப்புக்காக இந்தியாவிலிருந்து போன ஒரு டாக்டர் மச்சான், பூமணத்தோடு திரும்பி வந்தார். விஷயம் என்னவென்றால் லண்டன் ஆஸ்பத்திரியில் பேராசிரியர் இவரை ஒரு நோயாளியின் கல்லீரலை ஆராயச் சொல்லியிருக்கிறார். நமது இளம் டாக்டர் உடனே நோயாளியின் வயிற்றில் இடப்புறத்தை அழுத்திப் பார்த்தார்! அவ்வளவுதான் மறு விநாடி அவருக்குப் பிரிட்டன் டாட்டா சொல்லிவிட்டது.

இத்தகையவருக்கு இந்தியாவில் எப்படி டாக்டர் பட்டம் கிடைத்தது? நமது பல்கலைக் கழகங்கள் பல இந்த நிலையில்தாம் உள்ளன.

## கிணற்றுக்கும் கண்ட்ரோல்!

தனியார் வீடுகளில் உள்ள கிணறுகளின் உபயோகத்துக்கும் கண்ட்ரோல் என்ற 'மேலான' யோசனையைத் தமிழக சர்க்காருக்குக் கூறியிருக்கிறார், சி.எஸ்.! சென்னையில் உள்ள தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்க இதைவிடச் சிறந்த யோசனை யாரால் சொல்ல முடியும்?

சென்னையில் தனியார் வீடுகளில் கிணறுகள் இருந்தால், அவர்கள் உபயோகத்துக்கு எடுத்துக் கொள்வது போக அண்டை அயலாருக்கும், தங்களுக்கு வேண்டியவர்களுக்கும் கொடுத்து உதவி வருகிறார்கள். கிணற்றில் தண்ணீர் ஊற ஊற, இம்மக்கள் உள்ளத்திலும் இரக்கம், உதவும் பாண்மை முதலிய உயரிய பண்புகள் ஊறி ஏழை பாழைகளுக்கு உதவி வருகிறார்கள். அந்த ஈரத்தை ஒட்டி உலர்த்திவிட, கண்ட்ரோல் வேண்டுகிறார் சி. எஸ். தண்ணீருக்கும் ஒரு கறுப்பு மார்க்கெட் உருவாக்கப் பார்க்கிறார்!

## புகுந்த வீட்டின் நினைவு

ஸ்ரீமதி இந்திராகாந்திக்குத் திடீரென்று ஒரு விஷயம் ஞாபகம் வந்துவிட்டது. தாம் குஜராத் மாநிலத்தின் மருமகளாம். அவர் கணவர் வீட்டார் பலரும் குஜராத் மாநிலத்தில் வசித்தவர்களாம். தேவலை; வோட்டைப் பெற என்ன தந்திரங்கள் எல்லாம் செய்ய வேண்டி இருக்கிறது! குஜராத் பஞ்சத்திலும் பட்டினியிலும் வாடிய போது நினைவுக்கு வராத புக்ககத்து விஷயம் தேர்தல் காலத்தில் இந்திராகாந்திக்கு நினைவு வந்திருப்பதில் வியப்பில்லைதானே!

---

ராஜாஜி சிந்தனை

### விகாரம் வேண்டாம்!

காதல் கதைகள் எத்தகையவாயினும் வளரும் வயதில் உள்ள வாலிபர்கள் மனத்தைப் பற்றும். இந்தக் கதைகளைத்தான் விரும்புகிறார்கள்; வாங்கிப் படிக்கிறார்கள் என்று அதற்காக எழுத்தைக் கெடுத்துக் கொண்டே போனால், இலக்கியம் சரியான முறையில் வளர்ச்சி அடையாது. கம்பீரமும் அழகும் பொருந்திய காதல் கதைகள் எழுத வேண்டும். ஆனால் வெறும் காமவிகாரங்கள் எல்லாம் நூலுக்குப் பொருளாக மாட்டா. தமிழ் எழுத்தில் பதிவு பெற வேண்டிய விஷயங்கள் பெருந்தன்மை பெற்ற விஷயங்களாய் இருக்க வேண்டும். - சிறுகதை என்ற கட்டுரையில்.

டாக்டர்கள் கூறுகிறார்கள்:

# 3 மாதங்கள் ஆன பிறகு, முழுமையான உடல் வளர்ச்சி பெற உங்கள் குழந்தைக்குத் தேவை திட உணவு.



**பாரெக்ஸ்**

உங்கள் குழந்தை சீராக வளர்ந்திட அனைத்தையும் அளிப்பதைப் பாருங்கள்: எளிதில் சீரணிக்கக்கூடிய புரதம். கூடவே வைட்டமின், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் கார்போஹைட்ரேட்.

3 மாதங்கள் முதல் 3 ஆண்டுகள் வரை உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு அவசியம் பாரெக்ஸ்

| குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3—6 மாதங்கள் | 1—2 தேக்கரண்டியளவு—தினம் இருமுறை |
| 6—9 மாதங்கள் | 3—4 தேக்கரண்டியளவு—தினம் மூன்று முறை |
| 9 மாதங்கள்—3 ஆண்டுகள் | 4—6 தேக்கரண்டியளவு—தினம் நான்கு முறை |



உங்கள் பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலை இணைத்து எழுதுக: டிபார்ட்மெண்ட் k-1, த.பெ. 16558, பம்பாய் 400 025 (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**பாரெக்ஸ்®**

கிளாக்ஸோ தயாரிப்பு




**சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு**

CMGF-41-104 TM

# முருகப்பெருமான்

13

## ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய ஸ்வாமிகள்

தென் தேசத்தில் சீர்காழியில் பிறந்து ஜைனர்களை ஜயித்த அதே ஸ்வாமி, வட தேசத்தில் பௌத்தர்களின் ஆதிக்கம் இருந்த பொழுது பிரயாகையில் அவதாரம் செய்தார். அவருக்குக் குமாரில பட்டர் என்று பேர். பேரிலேயே 'குமார' சம்பந்தம் !

பக்தி, ஞானம் இவற்றையெல்லாம்கூட ஒதுக்கிவிட்டு, 'நமக்கு வேதம் விதித்த கர்மா இருக்கிறது. அதை அநுஷ்டித்தாலே பரம ச்ரேயஸ்' என்று அநுஷ்டானம் செய்பவர்கள் இருந்தார்கள். இவர்களுக்குக் கர்ம மீமாம்ஸகர்கள் என்று பெயர். வேதம் சொன்னபடி கர்மா செய்தார்கள். அதனாலேயே லோக க்ஷேமம், ஆத்ம திருப்தி இரண்டும் உண்டாவதைப் பார்த்தார்கள். எனவே, 'கர்மாவுக்குப் பலன் தருபவன் என்று ஓர் ஈச்வரனைக் கொண்டு வருவானேன்?' என்பது இவர்கள் கட்சி. அதனால் ஈச்வர பக்தி வேண்டியதில்லை என்பார்கள். கர்மாவிலேயே இத்தனை நிறைவு இருக்கிறபோது, கர்மமே இல்லாத ஞான விசாரம் எதற்கு என்பார்கள். ஞான விசாரம் என்பதற்காக லோக க்ஷேமார்த்தமான கர்மாவை விடுவது பாபம் என்பார்கள். அதாவது ஞான மார்க்கமும் இவர்களுக்கு ஆகாது. மீமாம்ஸ மதத்தில் மூன்று விதம் உண்டு. அவற்றில் பாட்ட மதம் என்பது (குமாரில) பட்டராலேயே ஏற்படுத்தப்பட்டது. அவருடைய ஆரம்ப காலக் கதையைப் பார்க்கலாம்.

அந்தச் சமயத்தில் வைதிக கர்மாநுஷ்டானங்களை யெல்லாம் கண்டனம் செய்யும் பௌத்தர்களின் செல்வாக்கு அதிகமாகி வந்தது. அவர்கள் அப்படிச் சொல்வதற்கான காரணங்களை — பௌத்தக் கொள்கைகளைப் பூரணமாகத் தெரிந்து கொண்டு, அவற்றை எதிர்வாதத்தால் நிராகரிக்க வேண்டும் என்று குமாரிலபட்டர் நினைத்தார். அவதார புருஷரான போதிலும் மநுஷ்ய ரீதியிலேயே பௌத்த சித்தாந்தங்களை வித்தியாப்பியாசம் செய்ய முடிவு செய்தார்.

ஆனால் பௌத்தர்கள் கர்மாநுஷ்டானம் செய்கிற ஒரு பிராம்மணனைத் தங்கள் விஹாரத்தில் சேர்த்துக் கொள்ளமாட்டார்களே ! இதற்காக ஒரு பெரிய தியாகம் செய்தார் குமாரில பட்டர். தம்மைப் பௌத்தர் என்றே சொல்லிக் கொண்டு விஹாரத்தில் சேர்ந்துவிட்டார். இவர் பிரசித்தி பெறாத காலம் அது. அதனால் அவர்களும் சேர்த்துக் கொண்டார்கள்.

அந்தரங்கமாக அவசியமான கர்மாக்களை மட்டும் அநுஷ்டித்து வந்தார்; மற்றச் சமயங்களில் பௌத்தர்களில் ஒருத்தராகவே காட்டிக் கொண்டார். இப்படியே, அங்கேயிருந்து ஸம்பூரணமாக பௌத்த சித்தாந்தங்களைக் கற்றுக் கொண்டுவிட்டார். அதற்கப்புறம் அவர் பிக்ஷுவாக இருந்து புத்த தர்மத்தைப் பரப்பப் போவதில்லை, எப்படியாவது கத்தரித்துக் கொண்டு நழுவப் பார்க்கிறார் என்று விஹாரத்தைச் சேர்ந்தவர்களுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அவருக்குத் தெரியாமல் விசாரணைகள் செய்து, அவரைப் பற்றிய உண்மைகளைத் தெரிந்து கொண்டார்கள். 'சரி, நம்மை வஞ்சனை பண்ணினவனை நாமும் வஞ்சிக்க வேண்டும். இவன் கொஞ்சமாக நம் ரகசியத் தத்துவங்களைத் தெரிந்து கொண்டிருந்தால் விஹாரத்திலிருந்து விரட்டினாலே போதும்; இவனோ முழுக்கத் தெரிந்து கொண்டு விட்டான். அதனால் லோகத்திலிருந்தே இவனை விரட்டிவிட வேண்டும்' என்று அவர்கள் தீர்மானித்தார்கள். அஹிம்சா தத்துவம் போன இடம் தெரியவில்லை. ஹித வஞ்சனையாக அவரை ஏதோ பேச்சுக் காட்டி விஹாரத்தின் ஏழாவது மாடிக்கு அழைத்துக் கொண்டு போனார்கள். அங்கேயிருந்து அவர் எதிர் பார்க்காத சமயத்தில் அவரை அப்படியே கீழே தள்ளிவிட்டார்கள்.

அந்த ஆபத்து சமயத்தில்கூட அவருக்கு வேதத்தில்தான் ஸ்மரணை. "வேதம் பிரமாணமாக இருந்தால் நான் ஏழாம் மாடியிலிருந்து விழுந்தும் எனக்குக் கெடுதல் ஏற்படாமலிருக்கட்டும்" என்று ஆணை வைத்துக் கொண்டே விழுந்தார்.

அதே போல் அத்தனை உச்சத்திலிருந்து அவர் விழுந்தும் அவருக்கு மண்டை நொறுங்கவில்லை. கைகால்கூட முறியவில்லை. கண்ணில் மட்டும் ஒரு கல் கொத்திக் கொண்டு கொஞ்சம் புண்ணாகிவிட்டது. நமக்கு அவர் எப்படிப் பிழைத்தார் என்று ஆச்சரியமாயிருக்கிறது. அவருக்கோ, 'வேதப் பிரமாணத்தின் மேல் நான் ஆணை வைத்திருக்க எனக்கு ஏன் இந்தச் சின்ன உபாதைகூட ஏற்பட வேண்டும் ?' என்று வேதத்தின் மேல் ஸ்வாதீனமாகக் கோபமே வந்தது.

அப்போது அசரீரி கேட்டது. அது, "நீ என்ன சொன்னாய் ? 'வேதம் பிரமாணமாதலால் எனக்குக் கெடுதி ஏற்படாது' என்று சொல்லவில்லையே ! இப்படிச் சொல்லாமல், 'வேதம் பிரமாணமாக **இருந்தால்...**' என்று சொன்னதில் கொஞ்சம் அவநம்பிக்கை தொக்கி நிற்கிறதல்லவா? அதன் பலன்தான் இந்தச் சின்ன உபத்திரவம்" என்றது.

குமாரிலபட்டர் முன்னைவிடத் தீவிரமாக வேத கர்மங்களில் விசுவாசம் வைத்து, பாட்ட மதத்தை ஸ்தாபித்து, பௌத்தத்தை ரொம்பவும் சக்தியோடு நிராகரித்து அதை நலிவடையச் செய்தார். (தொடரும்)

---

**1932-ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.**

# கொசுக்கடியின் தொல்லே
# சகிக்கமுடியவில்லே





அதிகமாக விற்பனையாகும் கொசு விரட்டி

# உங்களுக்குத்
# தேவை
# ஓடோமாஸ்




லட்சக் கணக்கானோர் நம்பிக்கையுடன் உபயோகிப்பது ● சிறு குழந்தைகளுக்கும் முற்றிலும் பத்திரமானது.

## சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

### பதின்மூன்றும் அத்தியாயம்

# அகக் கண் காட்சி

திகம்பர சமணரால் வழிகாட்டப் பெற்று நெடுமாறன் குகைக்குள்ளே நுழைந்தபோது, உள்ளிருந்து வந்த தூபப் புகையின் வாசனை அவனுடைய தலையைக் கிறுகிறுக்கச் செய்தது. மெதுவாகச் சமாளித்துக் கொண்டு உள்ளே சென்றான். சிறிது தூரம் சென்றதும் தென்பட்ட விசாலமான குகை மண்டபத்தில் ஓர் அபூர்வமான காட்சியைக் கண்டான். தீப ஸ்தம்பத்தின் மீதிருந்த பெரிய அகல் விளக்கின் தீபம் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

ஒரு பக்கத்தில் வைத்திருந்த பாத்திரத்திலிருந்து தூபப் புகை வந்து கொண்டிருந்தது. தீபத்தின் வெளிச்சமும் தூபத்தின் புகையும் சேர்ந்து அங்கே தோன்றிய காட்சியை ஏதோ ஒரு மாய லோகத்தின் கனவுக் காட்சியாகத் தோன்றும்படி செய்தது. நெடுமாறன் சற்று உற்றுப் பார்த்த பிறகு காட்சி சிறிது தெளிவடைந்து காணப்பட்டது. பத்துப் பன்னிரண்டு திகம்பர சமணர்கள் வட்ட வடிவமாக உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் அனைவரும் ஏதோ ஒரு மந்திரத்தை ஒரே குரலில் ஒரே விதமாக ஜபித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவர் உடுக்கை போன்ற ஒரு வாத்தியத்தைக் கையில் வைத்து முழங்கிக் கொண்டிருந்தார். மற்றொருவர் பல தந்திகள் உள்ள ஒரு முழ நீளமுள்ள வீணையைக் கையில் வைத்துக் கொண்டு அதன் நரம்புகளை விரலினால் தட்டிக் கொண்டிருந்தார். இந்த இரண்டு நாதங்களும் சேர்ந்து தான் 'தரிரிம்' 'தரிரிம்' என்ற ஒலியைக் கிளப்பி நெடுமாறன் உடம்பிலுள்ள நரம்புகளை யெல்லாம் புடைத்தெழச் செய்தன.

× × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × × ×

''சாதாரணமாக இந்த ஸ்டேஷனில் எக்ஸ்பிரஸ் நிற்காதே! இப்ப ஏன் நின்னுவிட்டது?''

''எதிரில் கூட்ஸ் வருகிறது.''

''அப்போ ஸ்டேஷனுக்கு வெளியே போய் ஓட்டலில் சாப்பிட்டுவிட்டு, மாட்னியும் பார்த்து விட்டு வந்துடலாம்னு சொல்லுங்கோ.''



வட்ட வடிவமாக உட்கார்ந்திருந்த சமணர்களுக்கு நடுவில் ஏறக்குறைய பதினறு வயதுள்ள ஒரு சிறுவன் காணப் பட்டான். மேற்படி மந்திர உச்சாடனத் துக்கும் வாத்தியங்களின் ஒலிக்கும் இசைய அவனுடைய தேகம் இலேசாக ஆடிக் கொண் டிருந்தது. அவனுடைய கண்களோ முக்கால் பங்கு மூடியிருந்தன. கண்கள் திறந்திருந்த அள வில் வெள்ளை விழி மட்டும் தெரிந்தபடியால் முகம் பயங்கரத் தோற்றத்தை அளித்தது.

நெடுமாறனை அழைத்து வந்த சமண முனிவர் அவனை நோக்கிச் சமிக்ஞை செய்து, எதுவும் பேச வேண்டாம் என்றும், சத்தம் செய்யாமல் உட்கார வேண்டுமென்றும் தெரிவித்தார்.

நெடுமாறன் அவ்விதமே சத்தம் செய்யாமல் உட்கார்ந்தான்.

மந்திர உச்சாடனம், வாத்திய முழக்கம் ஆகியவற்றின் வேகம் வர வர அதிகரித்து வந்தது. திகம்பர மண்டலத்துக்கு மத்தியிலிருந்த சிறுவனுடைய உடம்பின் ஆட்டமும் விரைவாகிக் கொண்டு வந்தது.

திடீரென்று மந்திர உச்சாடனமும் வாத்திய முழக்கமும் நின்றன.

சிறுவன் 'வீல்' என்று சத்தமிட்டுக் கொண்டு தரையில் சாய்ந்தான்.

சற்று நேரம் அந்தக் குகை மண்டபத்தில் ஒரு பயங்கர நிச்சப்தம் குடி கொண்டிருந்தது.

கட்டையைப் போல் கீழே கிடந்த சிறுவனின் கண்ணிமைகளும் உதடுகளும் இலேசாகத் துடித்தன.

டாக்டர்: உங்களுக்கு என்ன வியாதின்னு சரியா என்னாலே உடனே கண்டு பிடிக்க முடியல்லே! அடிக்கடி குடிக்கிறதினாலே இப்படி இருக்கலாம்னு நினைக்கிறேன்.
நோயாளி: அப்போ சரி, டாக்டர்! நீங்க குடிக்காதபோது வரேன்!

— உஷா

★★★

கண்டக்டர்: இது மகளிர். பஸ், சார்! இதிலே நீங்க வரக்கூடாது!
பிரயாணி: பரவாயில்லே! நான் எங்க ஆபீஸ் டிராமாவிலே எப்பவும் பொம்பிளே வேஷம் போடறவன்.





கையில் வீணை வைத்துக் கொண்டிருந்த சமணர் அதன் ஒற்றை நரம்பைஇலேசாகத் தட்டி விட்டு ''தம்பி! என் குரல் உனக்குக் கேட்கிறதா?'' என்று வினவினார்.

''கேட்கிறது, சுவாமி!'' என்று அந்தச் சிறுவனின் உதடுகள் முணுமுணுத்தன.

''அப்படியானால் நான் கேட்கிற கேள்விகளுக்கு விடை சொல். சற்றுமுன்னால் நீ இருந்த இடத்

xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx

''நம்ப ராமுவும் நீயும் இப்போ எல்லாம் சீட்டாடறதே இல்லியா?''

''ஊஹூம்! சீட்டிலே பித்தலாட்டம் பண்ணறவங்களோட யாராவது ஆடுவாங்களா?''

''மாட்டாங்க!''

''அதனால்தான் ராமு ஆடறதில்லே!''



துக்கும் இப்போதுள்ள இடத்துக்கும் ஏதேனும் வித்தியாசம் தெரிகிறதா?''

''சற்று முன்னால் நான் மலைக் குகையில் தரையில் கிடந்தேன். இப்போது ஆகாச வெளியில் மிதந்து கொண்டிருக்கிறேன். ஆகாச வெளியில் நினைத்த இடத்துக்கெல்லாம் போகக் கூடியவனாயிருக்கிறேன்.''

''நீ மிதக்கும் இடத்தில் உன்னைச் சுற்றி என்ன பார்க்கிறாய்?''

''என்னைச் சுற்றிலும் திரள் திரளாகப் புகை மண்டலங்கள் காணப்படுகின்றன; அந்தப் புகை மண்டலங்களுக்குள்ளே எத்தனை எத்தனையோ உருவங்கள் மங்கலாகக் காணப்படுகின்றன. அவை மறைந்து மறைந்து தோன்றிக்கொண்டிருக்கின்றன.''

''தம்பி! நீ நிற்கும் இடத்திலேயே நிற்க வேண்டுமா? முன்னாலும் பின்னாலும் போகக் கூடுமா?''

''முன்னாலும் பின்னாலும் மேலேயும் கீழேயும் நாலு திசைகளிலும் நினைத்தபடியெல்லாம் நான் போகக் கூடியவனாயிருக்கிறேன்.''

சிறுவனிடம் மேற்படி கேள்விகளைக் கேட்ட சமணர் நெடுமாறனை நோக்கி, ''பாண்டிய குமாரா! இந்தப் பிள்ளை ரிஷப தேவரின் அருள் மகிமையில் அகக் காட்சி பெற்றிருக்கிறான். இதற்கு முன் இருபதாயிரம் ஆண்டுக் காலத்தில் நடந்தவைகளையும், இனிமேல் இருபதாயிரம் ஆண்டுக் காலத்தில் நடக்கப் போகும் சம்பவங்களையும் இவனால் நேருக்கு நேர் கண்டு சொல்ல முடியும்! தங்களுக்கு ஏதாவது தெரிந்து கொள்ள வேண்டுமா?'' என்றார்.

நெடுமாறன் சற்றுத் தயங்கினான். 'வருங்காலத்தை மறைத்துக் கொண்டிருக்கும் மேகத் திரையை விலக்கிக் கொண்டு எதிர்காலச் சம்பவங்களைத் தான் பார்க்க வேண்டியது அவசியந்தானா? அப்படிப் பார்ப்பதனால் ஏதேனும் விபரீதம் ஏற்படுமா? ஒன்றும் தெரிந்து கொள்ளாமல் அந்த மந்திரக் குகையிலிருந்து உடனே எழுந்து போய் விடலாமா?'

மனத்தில் இப்படி நெடுமாறன் எண்ணினானே தவிர, அவனை அங்கிருந்து எழுந்து போக விடாமல் ஏதோ ஒரு சக்தி தடுத்து அவனை அங்கேயே பலமாக இருத்திக் கொண்டிருந்தது.

''ஆம், அடிகளே! வாதாபி யுத்த முடிவைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்ற வார்த்தைகள் நெடுமாறனின் வாயிலிருந்து தாமே வெளி வந்தன.

உடனே, சமணர் தரையில் கிடந்த சிறுவனை நோக்கி, ''தம்பி! கொஞ்சம் வடக்கு நோக்கிப் பிரயாணம் செய்து அங்கே என்ன பார்க்கிறாய் என்று சொல்லு!'' என்றார்.

''ஆகட்டும், சுவாமி! இதோ வட திசை நோக்கிப் போகிறேன்'' என்றான் சிறுவன்.

சற்றுப் பொறுத்து, ''ஆ! என்ன பயங்கரம்!'' என்றான்.

''தம்பி! அங்கே என்ன பயங்கரமான காட்சியை நீ பார்க்கிறாய்?'' என்று சமணர் கேட்டார்.

''ஆகா! மிகப் பயங்கரமான யுத்தம் நடக்கிறது. கணக்கிலடங்காத வீரர்கள் வாட்களாலும், வேல்களாலும் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டு செத்து விழுகிறார்கள். எங்கே பார்த்தாலும் இரத்த வெள்ளம் ஆறாக ஓடுகிறது. பெரிய பெரிய பிரம்மாண்டமான யானைகள் பயங்கரமாகப் பிளிறிக் கொண்டு ஒன்றையொன்று தாக்குகின்றன. யுத்தம் ஒரு பெரிய பிரம்மாண்டமான கோட்டை மதிலுக்குப் பக்கத்தில் நடக்கிறது. கோட்டையின்

ஒரு சிறுவன் தந்தையிடம்: இனிமேல் எனக்குக் கொடுக்கும் 'பாக்கெட் மணி'க்கு டியர்னஸ் அலவன்ஸும் கொடுக்க வேண்டும். -டெக்கான் ஹெரால்ட் - பாலி

★ ★ ★ ★

''குலோப்ஜான் வித் ஜீரா, பூரி அண்டு பொட்டாட்டோ, தோசை ஒளர் சட்னி, இட்லி கம் சாம்பார் கொண்டா.''

''அப்புறம்?''

''பில் வித் கைமாத்து!''



# வாய்நாற்றம் உங்களை விலகி நிற்கச் செய்கிறது...

கால்கேட் ஒன்று சேர்க்கிறது

COLGATE DENTAL CREAM

## கால்கேட் டென்டல் க்ரீமின் மூலம் வாய் துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள்... நாள்முழுவதும் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்!

கால்கேட், 10க்கு 7 பேர்களில் வாய்துர்நாற்றத்தை உடனடியாக அகற்றுகிறது என்றும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட் முறையில் பற்களைத் துலக்குவதால், இதுவரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பேரளவில் ஏராளமானவர்களுக்கு பற்சிதைவு தடுக்கப் படுகிறது என்றும் விஞ்ஞான சோதனைகள் நிரூபித்துள்ளன. ஏனெனில், ஒரே தேய்ப்பில் வாய்துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் விளைவிக்கும் கிருமிகளை 85 சதவீதம் வரை, கால்கேட் டென்டல் க்ரீம் அகற்றி விடுகிறது.
அதன் விந்தைமிக்க பெப்பர்மின்ட் சுவையேதனி— கால்கேட் டென்டல் க்ரீம் கொண்டு குழந்தைகள் தவறாமல் பல்துலக்க விரும்புவதில் வியப்பென்ன!

தூய்மையான இனிய மூச்சுடனே, வெண்மையான பற்களையும் பெற்றிடவே...

**உலகிலேயே அதிக மக்கள் மற்றெந்த பற்பசையையும்விட, கால்கேட் பற்பசையையே வாங்குகிறார்கள்!**



வெண்மையான பற்களையும் ஆரோக்கியமான ஈறுகளையும் தூய்மையான இனிய மூச்சையும் பெற்றிடவே **கால்கேட் டூத் பிரஷ்களை** உபயோகியுங்கள்! உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவருக்கும் ஏற்றவாறு அமைய— 16 ரகங்கள்.

DC-G.50 TH (8)

1. கேசத்தை ஷாம்புவால் சுத்தம் செய்யுங்கள்.
2. நரை முடியின் மீது க்ளீம் ஹேர் டையை சமமாகப் பரப்புங்கள். சிறிது நேரம் அப்படியே இருக்கட்டும்.
3. நன்றாக நீரால் கழுவி, ஷாம்புவால் சுத்தம் செய்யுங்கள்.
4. கண்ணாடியில் பாருங்கள். நீங்கள் எவ்வளவு இளமையுடன் தோன்றுகிறீர்கள்!

# உங்கள் கேசத்தை மீண்டும் இளமையுடன் விளங்க வைப்பது எவ்வளவு எளிது பாருங்கள்.

புதிய க்ளீம் ஹேர் டை உபயோகிக்க எளிதானது. இது சமமாகப் பரவி, விரைவில் செயலாற்றுகிறது. உங்கள் கேசத்திற்கு இயற்கையான வண்ணமும் பளபளப்பும் அளிக்கிறது. இது கரைந்து போகாது; மங்காது—பல முறை கேசத்தை சுத்தம் செய்த பிறகு கூட. உங்களுக்குச் சிறந்தது—க்ளீம் பர்மனென்ட் ஹேர் டை.

புதிது




# க்ளீம்

## பர்மனென்ட் ஹேர் டை

இயற்கையான கருமை & கருமை கலந்த பழுப்பு.

சிறப்பான வண்ணம் பெற க்ளீம் ஷாம்பு உபயோகியுங்கள். பிரபல கேச அலங்கார நிபுணர்கள் சிபாரிசு செய்வது.

Geoffrey Manners & Co., Ltd.

GHD-1-A

பிரதான வாசலில் ஒரு பெரிய கொடி பறக்கிறது. அந்தக் கொடியில் வராகத்தின் உருவம் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆகா! கோட்டைக் கதவு இதோ திறக்கிறது. கணக்கற்ற வீரர்கள் கோட்டைக்குள்ளேயிருந்து வெளி வருகிறார்கள். ஆ! யுத்தம் இன்னும் கோரமாக நடக்கிறது. சாவுக்குக் கணக்கே இல்லை. கண்ணுக்கெட்டிய தூரம் ஒரே பிணக் காடு! அம்மம்மா! பார்க்கவே முடியவில்லை!''

சிறுவனுடைய கண்ணிமைகள் அப்போது இலேசாகத் துடித்ததைப் பார்த்த சமண குரு, ''தம்பி! பயப்படாதே! உனக்கு ஒன்றும் நேராது. இன்னும் சிறிது உற்றுப் பார். போர்க்களம் முழுவதும் பார்த்து, மிகவும் நெருக்கமான சண்டை எங்கே நடக்கிறதென்று கவனி!'' என்றார்.

''ஆம், ஆம்! அதோ ஓரிடத்தில் பிரமாதமான கைகலந்த சண்டை நடக்கிறது. குதிரை மேல் ஏறிய வீரன் ஒருவன் இரண்டு கைகளிலும் இரண்டு வாட்கள் ஏந்திப் பயங்கரப் போர் புரிகிறான். அவனைச் சுற்றிலும் எதிரிகள் சூழ்ந்து கொண்டு தாக்குகிறார்கள். அவன் தன்னந் தனியாக நின்று அவ்வளவு பேரையும் திருப்பித் தாக்குகிறான். அவனுடைய கை வாட்கள் அடிக்கடி மின்னலைப் போல் ஜொலிக்கின்றன. ஒவ்வொரு வாள் வீச்சுக்கும் ஒரு தலை உருளுகிறது. ஆகா! இதோ அந்த வீரனுக்குத் துணையாக இன்னும் சில வீரர்கள் வருகிறார்கள். அவர்களுக்கு நடுவில் மீனக் கொடி பறக்கிறது. 'நெடுமாற பாண்டியர் வாழ்க! வாதாபிப் புலிகேசி வீழ்க!' என்று அவர்கள் கர்ஜித்துக் கொண்டு எதிரிகள் மீது பாய்கிறார்கள்.''

இப்படி அந்தச் சிறுவன் சொன்னபோது, இதுவரை சிறிது அலட்சிய பாவத்துடனேயே கேட்டுக் கொண்டு வந்த நெடுமாறன் திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தான். மேலே என்ன நடக்கப் போகிறது என்று தெரிந்து கொள்வதில் அவனுக்கு அப்போது அளவில்லாத பரபரப்பு உண்டாயிற்று.

**ம**றுபடியும் சிறிது நேரம் சிறுவன் பேசாதிருந்தான். சமண குரு மீண்டும் அவனைத் தூண்டினார். மேலே என்ன நடக்கிறது என்று நன்றாகப் பார்த்துக் கூறும்படி ஆக்ஞாபித்தார்.



''ஆகா! சண்டை முடிந்து விட்டது. எதிரிகள் எல்லோரும் செத்து விழுந்து விட்டார்கள். வெற்றியடைந்த வீரர்கள் அந்த அசகாய சூரனைச் சூழ்ந்து கொண்டு, 'மீனக் கொடி வாழ்க! நெடுமாற பாண்டியர் நீடூழி வாழ்க!' என்று கோஷிக்கிறார்கள். ஆகா! அவர்களுடைய கோஷமும் ஜயபேரிகைகளின் முழக்கமும் சேர்ந்து காது செவிடுபடச் செய்கின்றன!''

''அதோ இன்னொரு வீரர் கும்பல் வருகிறது. அந்தக் கும்பலின் நடுவில் ஒரு ரதம் காணப்படுகிறது. ரதத்தின் மேல் ரிஷபக் கொடி பறக்கிறது. ரதத்தில் கம்பீர வடிவமுள்ள ஒருவர் வீற்றிருக்கிறார். அவருடைய முகத்தில் குரோதம் கொதித்துக் கொண்டிருக்கிறது. இந்த ரதத்தைச் சூழ்ந்து வரும் வீரர்கள், 'மாமல்ல சக்கரவர்த்தி வாழ்க!' என்று கோஷம் செய்கிறார்கள். ஆனால் அவர்களுடைய கோஷத்தில் அவ்வளவு சக்தி இல்லை. இரண்டு கூட்டமும் சந்திக்கிறது. ரதத்தில் வந்தவரும் குதிரை மேலிருந்தவரும் ஒருவரையொருவர் பார்க்கிறார்கள். இரண்டு பேரும் கீழே இறங்குகிறார்கள். சமீபத்தில் வருகிறார்கள். மீனக் கொடிக்குரிய வீரர், ரிஷபக் கொடிக்கு உரியவரைப் பார்த்து, ''மாமல்லரே! பகைவர்கள் ஒழிந்தார்கள். புலிகேசி இறந்தான்; வாதாபிக் கோட்டை நம் வசமாகிவிட்டது. இனிமேல் தங்கள்

---

''என் சைக்கிளைக் காணோம் என்று 2-2-1922லே ஒரு புகார் கொடுத்தேனே நினைவிருக்கிறதா?''

''அதுக்கு இப்ப என்ன?''

''அது அகப்பட்டு விட்டது. நீங்க இனி தேடவேண்டாம்!''



காரியம். நான் போக விடை கொடுங்கள்!'' என்று கேட்கிறார். ஐயோ! ரிஷபக் கொடியாரின் முகத்தில் குரோதம் தாண்டவமாடுகிறது. அவர், 'அடே பாண்டியப் பதரே! எனக்கு வரவேண்டிய புகழை யெல்லாம் நீ கொண்டு போய் விட்டாயல்லவா?' என்று சொல்லிக் கொண்டே உடைவாளை உருவுகிறார். மீனக் கொடியார், 'வேண்டாம் சக்கரவர்த்தி! வேண்டாம்! நமக்குள் எதற்காகச் சண்டை?' என்கிறார். ரிஷபக் கொடியார் அதைக் கேட்காமல் உடைவாளை வீசுகிறார், ஐயையோ!''

கேட்டவர்களின் ரோமம் சிலிர்க்கச் செய்த 'வீல்' சத்தத்துடன் இத்தனை நேரமும் தரையில் படுத்துக் கிடந்த சிறுவன் எழுந்து உட்கார்ந்தான். பீதியும் வெருட்சியும் நிறைந்த கண்களை அகலமாகத் திறந்து சுற்றிலும் பார்த்துத் திருதிருவென்று விழித்தான்.

நெடுமாற பாண்டியன் உடம்பு நடுங்கிக் கொண்டிருந்தது. சமண முனியைப் பார்த்து, ''அப்புறம் நடந்ததைத் தெரிந்து கொள்ள வேண்டாமா? முக்கியமான தருணத்தில் எழுந்து விட்டானே?'' என்றான்.

''இளவரசே! இன்றைக்கு இவ்வளவு தான். மறுபடியும் இன்றிரவு இவனை அகக் காட்சி காணும்படி செய்ய முடியாது. பிறகு நடந்ததைத் தெரிந்து கொள்ள விரும்பினால் நாளைக்குத் தாங்கள் திரும்பவும் இவ்விடத்துக்கு வந்தாக வேண்டும்!'' என்றார்.

### பதினான்காம் அத்தியாயம்

## படை கிளம்பல்

மறுநாள் விஜயதசமி அன்று காலையில் வழக்கம்போல் கீழ்த் திசையில் உதயமான சூரியன் காஞ்சி மாநகரம் அன்றளித்த அசாதாரணமான காட்சியைக் கண்டு சற்றுத் திகைத்துப் போய் நின்ற இடத்திலேயே நின்றதாகக் காணப்பட்டது.



பூர்விகப் பெருமை வாய்ந்த பல்லவ அரண்மனை வாசலில் நின்று மாமல்ல சக்கரவர்த்தி யாத்ரா தானம், கிரகப் பிரீதி ஆகிய சடங்குகளைச் செய்து விட்டு, குலகுரு ருத்ராச்சாரியார் முதலிய பெரியோர்களின் ஆசி பெற்று, தாயார் புவன மகாதேவியிடமும் பட்ட மகிஷி வானமா தேவியிடமும் விடை பெற்றுக் கொண்டு பட்டத்துப் போர் யானையின் மீது ஏறிப் போர்முனைக்குப் புறப்பட்டார். அப்போது காஞ்சி நகரத்தின் மாட மாளிகைகளெல்லாம் அதிரும்படியாகவும், மண்டபங்களிலெல்லாம் எதிரொலி கிளம்பும்படியாகவும் அநேகம் போர் முரசுகளும் சங்கங்களும் எக்காளங்களும் ஆர்த்து முழங்கின.

சக்கரவர்த்தி ஏறிய பட்டத்து யானைக்கு முன்னாலும் பின்னாலும் அணி அணியாக நின்ற யானைகளும் குதிரைகளும் ரதங்களும் ஏக காலத்தில் நகரத் தொடங்கிக் காஞ்சி நகரின் வடக்குக் கோட்டை வாசலை நோக்கிச் செல்லத் தொடங்கின.

இந்த ஊர்வலம் காஞ்சியின் இராஜ வீதிகளின் வழியாகச் சென்றபோது இருபுறத்திலும் இருந்த மாளிகை மேல் மாடங்களிலிருந்து பூரணச் சந்திரனையும் பொன்னிறத் தாமரையையும் ஒத்த முகங்களையுடைய பெண்மணிகள் பல வகை நறுமலர்களையும் மஞ்சள் கலந்த அட்சதையையும் சக்கரவர்த்தியின்மீது தூவி, ''ஜய விஜயீபவ!'' என்று மங்கல வாழ்த்துக் கூறினார்கள்.

---

ஹைதராபாத்தில் முடிந்த தெலுங்கு மாநாடு நிறைவேற்றிய தீர்மானங்களில் ஒன்று எல்லோரும் எதிர்பார்ப்பதுதான். ''அடுத்த மாநாடு வெளி நாட்டில் நடத்தப்படும்.'' — இந்தியன் எக்ஸ்பிரஸ் — கே. ஆர்.

★ ★ ★



ஓட்டலில் டிபன் சாப்பிட்ட பிறகு இருவர் பேசிக்கொண்டது: ''சரி. ஒரு காசை எடுத்துச் சுண்டிப் போடு. தலை விழுந்தால் நீ பில் கொடு. பூ விழுந்தால் நான் கொடுக்கிறேன்.'' அடுத்தவர்: நீ ஏமாந்தாய்! சுண்டிப் போடக்கூட என்னிடம் காசு இல்லே!

— டெக்கான் ஹெரால்ட் — மணி

''பெண்கள் ஆண்டை முன்னிட்டு நான் வாங்குகிற சம்பளத்தை அப்படியே என் மனைவியிடம் தருவதாகத் தீர்மானித்து விட்டேன். இதற்காகவாவது மனம் இரங்கி எனக்கு இங்கே ஒரு வேலை போட்டுத் தாங்க சார், ப்ளீஸ்!''

★ ★ ★ ★ ★

முன்பெல்லாம் பரீட்சை சமயங்களில் மாணவர்கள் கோவிலுக்குப் போவார்கள். இப்பொழுது பரீட்சை ஹாலில் கண்காணிப்பாளர்களாகப் பணிபுரிபவர்கள் கோவிலுக்குப் போகிறார்கள்!

— டெக்கான் ஹெரால்ட் — பாபு



இப்படி நகர மாந்தர்களால் குதூகலமாக வழியனுப்பப்பட்ட சக்கரவர்த்தியின் போர்க்கோல ஊர்வலம் ஒரு முகூர்த்த காலத்தில் வடக்குக் கோட்டை வாசலை அடைந்தது. நன்றாகத் திறந்திருந்த கோட்டை வாசல் வழியாகப் பார்க்கும்போது கோட்டைக்கு வெளியிலே சற்றுத் தூரத்தில் ஆரம்பித்துக் கண்ணுக்கெட்டியவரை பரவிய ஒரு சேனா சமுத்திரம் காணப்பட்டது. அந்தச் சேனா சமுத்திரத்தின் இடையிடையே கணக்கில்லாத கொடிகள் காற்றிலே பறந்த காட்சியானது, காற்றுப் பலமாய் அடிக்கும் போது சமுத்திரத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் வெண்ணுரை எறிந்து பாயும் அலைகளை ஒத்திருந்தது.

* * *

வடக்குக் கோட்டை வாசலில், அகழிக்கு அப்புறத்தில் நின்று, மாமல்ல சக்கரவர்த்தி கடைசியாக விடைபெற்றுக் கொண்டது, மானவன்மரிடமும் தம் அருமைக் குழந்தைகள் இருவரிடமும்தான்.

மகேந்திரனையும் குந்தவியையும் தமது இரு கரங்களாலும் வாரி அணைத்துத் தழுவிக் கொண்ட போது, 'இந்தக் குழந்தைகளை இனிமேல் எப்போதாவது காணப் போகிறோமோ, இல்லையோ?' என்ற எண்ணம் தோன்றவும், மாமல்லரின் கண்கள் கலங்கிக் கண்ணீர் ததும்பின. குழந்தைகளைக் கீழே இறக்கிவிட்டு மானவன்மரைப் பார்த்து மாமல்லர் சொன்னார்: ''என் அருமை நண்பரே! இந்தக் குழந்தைகளையும் இவர்களுடைய தாயாரையும் பல்லவ இராஜ்யத்தையும் உம்மை நம்பித்தான் ஒப்படைத்துவிட்டுப் போகிறேன். நீர்தான் இவர்களைக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்து நான் திரும்பி வரும் போது ஒப்படைக்க வேண்டும். மானவன்மரே! பரஞ்சோதியின் அபிப்பிராயப்படி திருக்கழுக்குன்றத்தில் திரண்டிருந்த படையில் ஒரு பகுதியை நிறுத்திவிட்டுப் போகிறேன். பாண்டிய குமாரனாலோ, அவனுடைய படையினாலோ காஞ்சிக்கு அபாயம் நேர்வதாயிருந்தால், நம் படையைப் பயன்படுத்தத் தயங்க வேண்டாம்.''

''ஆகட்டும், பிரபு! தங்களுக்கு இவ்விடத்துக் கவலை சிறிதும் வேண்டாம்!'' என்றான் மானவன்மன்.

''ரொம்ப சந்தோஷம். கடைசி நேரத்தில் எங்கே நீங்களும் வரவேண்டும் என்று பிடிவாதம் பிடிக்கிறீர்களோ என்று பயந்து கொண்டிருந்தேன். இது தான் உண்மையான சிநேகத்துக்கு அழகு!'' என்று உள்ளம் உவந்து கூறினார் மாமல்லர்.

அப்போது மகேந்திரன் ஆயிரத்தோராவது தடவையாக, ''அப்பா! நானும் வாதாபிப் போருக்கு வருகிறேன். என்னையும் அழைத்துப் போங்கள்!'' என்றான்.

புதல்வனைப் பார்த்து மாமல்லர், ''மகேந்திரா! இந்த வாதாபி யுத்தம் கிடக்கட்டும். இதைவிடப் பெரிய இலங்கை யுத்தம் வரப் போகிறது. உன் மாமாவின் இராஜ்யத்தை அபகரித்துக் கொண்டவனைப் போரில் கொன்று இராஜ்யத்தைத் திரும்பப் பெற வேண்டும். அந்த யுத்தத்துக்கு நீ போகலாம்'' என்றார்.

இவ்விதம் கூறிவிட்டு மாமல்லர் சட்டென்று குழந்தைகளைப் பிரிந்து சென்று போர் யானை மீது ஏறிக்கொண்டார். அவ்வளவுதான்! அந்தப் பெரிய பிரம்மாண்டமான சைனியம் சமுத்திரமே இடம் பெயர்ந்து செல்வது போல் மெதுவாகச் செல்லத் தொடங்கியது. அவ்வளவு பெரிய சைனியம் ஏக காலத்தில் நகரும் போது கிளம்பிய புழுதிப் படலமானது வானத்தையும் பூமியையும் ஒருங்கே மறைத்தது. அந்தப் புழுதிப் படலத்தில் பல்லவ சைனியம் அடியோடு மறைந்து போகும் வரையில் மானவன்மரும், மகேந்திரனும், குந்தவியும் கோட்டை வாசலில் நின்று கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். (தொடரும்)

எங்களுடைய ஏர்க்காடு விஜயம் முதல் நாளன்றே பெரு வெற்றியாகிவிட்டது. காரணம், அன்று பூங்காவில் சினிமாப் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்ததுதான்! அப்போதே அதைப் பார்க்கத் துடித்த மனைவி மக்களைச் சமாதானப்படுத்தி, "ஹோட்டலுக்குப் போய் ஸ்நான பானங்களை முடித்துக் கொண்டு திரும்ப இங்கேயே ஓடி வந்துவிடலாம்" என்றேன்.

ஆனால் எங்கள் அதிர்ஷ்டம் பாருங்கள், சினிமா ஷூட்டிங்கும் எங்களைப் பின் கமலஹாசன் அவளைப் பின்தொடர்ந்து வந்தார். அவள் தோள்களைப் பற்றி, "தீபா! நீ ஏன் என்னை வெறுக்கிறாய் என்று சொல்லு; நான் உன் பாதையிலிருந்து விலகுவது மட்டுமல்ல; உன் பார்வையிலிருந்தே விலகுகிறேன்! சொல்லு, தீபா சொல்லு!" என்றார்.

நானாக இருந்தால் இந்த வசனத்தை உளறிக் கொட்டிக் கிளறி மூடியிருப்பேன். "நான் உன் பாதையிலிருந்து பார்ப்பது மட்டும் அல்ல, விலகியிருந்து பதைக்கிறேன்!" என்று கூறி டைரக்டரை வதைத்திருப்பேன்!

# ஏழுமுறையில் ஒரு



தொடர்ந்து ஹோட்டலுக்கே வந்துவிட்டது! தோட்டத்தில் நடந்தது.

"டிபன் காப்பிக்குப் போகலாமே?" என்றேன். யாரும் அசையவில்லை!

"ஏர்க்காடைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பலாமே?" என்றேன். பதில் இல்லை!

"ஐஸ்கிரீம் சாப்பிடச் செல்வோமா?" என்றுகூடக் கேட்டுப் பார்த்தேன்.

"உஷ்! சித்தே சும்மா இருங்களேன், அப்பா! ஒவ்வொருத்தர் சினிமா ஷூட்டிங் பார்க்க ஸ்டுடியோ பாஸ் கிடைக்காதான்னு கிடந்து ஏங்கறா; இங்கே ஷூட்டிங்கே நம்மைத் தேடி வந்திருக்கு" என்றாள் மகள்.

தீபா (புது முகம்) ஹோட்டல் வாசலை விட்டு இறங்கி விருவிரு என்று நடந்தாள்.

ஏனென்றால், 'ஸ்பூனரிஸம்' எனப்படும் குறை எனக்கு ஓரளவு உண்டு. ஒரு சமயம் நண்பர்கள் வந்திருந்த போது, "இரண்டு இட்டிலியில் ஒரு தட்டை வைத்துக் கொண்டு வர இத்தனை நேரமா?" என்று மனைவியைக் கோபித்துக் கொண்டவன் நான். அப்போது எழுந்த சிரிப்பொலியில் என் கோபம் பட்டபாடு எனக்குத் தெரியும்!

இங்கேயோ கமலஹாசன் இந்தக் கஷ்டமான வாக்கியத்தை இரண்டு ரிகர்சலுக்கும் இரண்டு 'டேக்கு'களுக்கும் ஸ்பஷ்டமாக உச்சரித்து என்னை வியப்பில் ஆழ்த்தியதுடன் டைரக்டர் சீனிவாசனை மகிழ்வித்தார். ஆனால் கமலஹாஸனுடைய அந்த ஸ்கூட்டர்தான் காலை வாரிவிட்டு விட்டது!

✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕✕

"நீர் வந்தால்தான் திறப்பு விழா என்று தீர்மானித்து விட்டோம். நீர் இல்லாமல் திறப்பு இராது. அதனால் நீர் நிச்சயம் வரவேண்டும்."

"நீர் நீர் என்று நூறு தடவை சொல்லியாச்சு. எதை நான் திறந்து வைக்க வேண்டும்?"

"தண்ணீர்ப் பந்தலைத்தான்!"



கமலஹாஸன் உதைக்கும்போது அது ஸ்டார்ட் ஆக மறுக்க வேண்டும்; அடுத்து தீபா அருகில் வந்து அவரை ஒதுங்கி இருக்குமாறு ஜாடை காட்டிவிட்டு அதை உதைப்பாள். ஸ்கூட்டர் உடனே ஸ்டார்ட் ஆக வேண்டும்! ஆனால் ஸ்கூட்டர் இதற்கு நேர் விரோதமாக நடந்து கொண்டது. கமலஹாஸனின் பாத தூளி படவே தவமிருந்தாற் போல் அவர் கால் வைத்ததும் 'டுர்ர்ர்ர்' என்று சப்தித்தது. தீபா எத்தனைதான் உதைத்தாலும் அசைந்து கொடாமலிருந்து பழி வாங்கியது. கடைசியில் கமலஹாஸன் இதற்கு ஒரு வழி செய்தார். ''தீபா! நான் ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தே வைத்துவிடுகிறேன். அப்போது அதைக் காலால் உதைப்பது உனக்குச் சௌகரியமாய் இருக்கும். 'ஸவுண்ட் ரிகார்டிங்' இல்லாமல் படம் எடுத்துக் கொள்ளலாம்'' என்றார்.

உடனே, ''கிளிஸிரின், கிளிஸிரின்'' என்றும், ''வெட் கிளாத்'', ''வெட்கிளாத்'' என்றும் கோரிக்கைகள் கிளம்பின. டைரக்டர் சீனிவாசன் ''டேக், டேக்'' என்றார். காமிரா இயங்கி 'அந்தரங்க'த்தின் ஒரு காட்சியைப் பதிவு செய்தது.

அடுத்து, ''பசை, பசை! கோந்து!'' என்று கூச்சல் பிறந்தது. விஷயம் என்னவென்றால் போலீஸ் வேஷத்தில் இருந்த

## கி.ராஜேந்திரன்





மேலே: லேசன் லவ்ட் - ஏற்காட்டில் ஒரு மலை உச்சி.
கீழே: ''தீபா! நீ ஏன் என்னை வெறுக்கிறாய் சொல்லு......''

✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕ ✕



''அம்மா! என் சிநேகிதன் பஞ்சன் சொல்றான். எத்தனையும் பெரிசு தெரியுமா? இந்த வீடு அத்தனை பெரிசு!''

''இந்தா, எதையும் ஒரேயடியா மிகைப்படுத்திப் பேசாதே. உனக்கு வேலையாய்ப் போச்சு! அப்படிப் பேசாதேன்னு இதுவரை உனக்கு இருபது லட்சம் தரம் சொல்லிக் கொடுத்துட்டேன்!''



நடைபாதையில் எதிரே வந்த ஒருவரை நிறுத்தினார் பெண்டாட்டி தாசர்.

''என்ன ஆச்சரியம்! உங்க முகத்தைப் பார்த்தா அப்படியே என் மனைவி போலவே இருக்கு! மீசை ஒண்ணுதான் வித்தியாசம்!''

''ஆனா எனக்கு மீசை இல்லையே?'' என்று கூறி விழித்தார் வழிமறிக்கப்பட்டவர்.

''என் பெண்டாட்டிக்கு இருக்கே'' என்று பதில் கிடைத்தது!



ஐ.எஸ்.ஆரின் ஹிட்லர் மீசை சரியாக ஒட்டிக்கொள்ளவில்லை. ஒரு வழியாக அது சரிப்பட்டதும் ஐ.எஸ்.ஆர். கமலஹாஸனை அதிகார தோரணையுடன் நெருங்கினார். ''தம்பி! பப்ளிக் ப்ளேஸ்லே விருப்பமில்லாத ஒரு பெண்ணை வற்புறுத்தக் கூடாதுப்பா. பேசாமல் போறியா, இல்லே ஸ்டேஜனுக்கு வார்றியா ?'' என்றார்.

இந்த 'டேக்' ஆனதும் கமலஹாஸன் ஸ்கூட்டரில் ஏறிப் போய்விடுகிறார். அவர் தலை மறைந்ததும் ஐ.எஸ். ஆருக்குத் திடீர் ஞானோதயம் உண்டாகிறது! ஓர் எம்பு எம்பிக் குதித்தார் ஐ.எஸ்.ஆர். ''அடேய், அவன் கெட்ட வார்த்தை எழுதிய புத்தகத்தை வைச்சுண்டிருந்தவன் இல்லே? பிடிடா பிடிடா !'' என்று கத்திக் கொண்டு ஓடினார்!

இந்தத் தமாஷுக்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் டைரக்டர் சீனிவாசன் கமலஹாஸனை நெருங்கி ஒரு ஜோக் அடித்தார். ''வெரிகுட், கமல் வெரிகுட்! சத்யஜித் ரே டைப்!'' என்று அவர் பாராட்டியதை ஜோக்காக அன்றி வேறு எப்படி எடுத்துக்கொள்ள முடியும் ?

விடுமுறையில் முதல் நாளன்றே ஷூட்டிங் ஒன்றை நாங்கள் பார்த்ததன் நிகர விளைவு என்னவென்றால் அடுத்த பத்து நாட்களும் காலையில் என் மகன் பால் சாப்பிடப் பிடிவாதம் பிடித்த போதெல்லாம் நான் ஐ.எஸ். ஆர். பாணியில் ஓர் எம்பு எம்பிக் குதித்து. ''அடேய்! பால் சாப்பிடப் படுத்திய பையன் இல்லே இவன் ! பேசாம குடிக்கிறியா ? இல்லே மெட்ராஸுக்குப் போறியா ?'' என்று கேட்க வேண்டியிருந்தது!

* * *

ஏர்க்காடை உண்மையிலேயே அனுபவிக்க விரும்புகிறவர்கள் ஒரு பெரிய தியாகத்தைச் செய்ய வேண்டும். அதிகாலையில் சிலுசிலுவென்று இருக்கும்போது. இன்னும் சற்று நேரம் இழுத்துப் போர்த்துக் கொண்டு தூங்கலாம் என்று தோன்றும் சமயம், விருட்டென்று போர்வையை நீக்கிவிட்டு எழுந்திருக்கும் மனப் பக்குவம் பெற வேண்டும். பல் துலக்கி ஒரு கப் காப்பி அருந்திவிட்டு உலாவப் போக வேண்டும்.

ஆகா ! அந்த அனுபவம்தான் எத்தனை ஆனந்தமானது ! திரும்பிய பக்கமெல்லாம் மலைச் சரிவுகளில் காப்பித் தோட்டங்கள். காப்பிச் செடிகளின் கிளைகளில் மல்லிப் பூக்களால் வேணி தயாரித்தது போல் வரிசை வரிசையாகப் பூக்கள் மலர்ந்திருப்பதானது இரவில் வெண்பனிதான் சொரிந்திருக்கிறதோ என்ற மயக்கத்தை உண்டுபண்ணும். காப்பிச் செடிகளுக்கு நிழல் தர வளர்க்கப்பட்டுள்ள கொய்யா, கமலா, பலா, ஆரஞ்சு, பேரி போன்ற பல ரக மரங்களினூடே காலைக் கதிரவனின் கிரணங்கள் ஊடுருவி இரவில் பெய்த மழையால் ஈரமாகிக் கிடக்கும் காப்பிச் செடி இலைகள் மீதாக நர்த்தனமாடும். அளவான குளிர், இதமான வெய்யில். பசும் பொன் என்ற வார்த்தையின் முழுப்பொருளையும் உணர்த்தும் எழில் தோற்றம்.

சற்றுத் தூரம் போனதும் தேன் மணத்தை நுகர்கிறோம். அண்ணாந்து பார்த்தால் ஒரு மாபெரும் மரத்தில் பிரும்மாண்டமான தேன் கூடுகள். ஒன்று இரண்டு என்று ஐந்து வரை எண்ணுகிறோம். 'ஒரு மரத்தில் இத்தனை ; சோலை வனங்களுள் இன்னும் எத்தனையோ ' என்று நினைத்தவாறு மேலே நடக்கிறோம். மணம் மாறுகிறது. கீழே சில இளம் மஞ்சள் இதழ்கள். அண்ணாந்து நோக்கினால் கிளைகளின் நுனிகளில் மலர்களைத் தாங்கி நிற்கும் மனோரஞ்சித மரம்! அருகே நாகதேவதைக்கு ஒரு குட்டிக் கோயில். இன்னும் பல ரக மணங்களை அனுபவித்தபடி செல்கிறோம். சற்றுத் தொலைவில் கதிரவனின் ஒளிக் கரங்களால் தழுவப்பட்ட சில்வர் ஓக் மரங்கள் ஒரு மலைச் சரிவு முழுதும் காணப்படுகின்

அடுத்த இதழில்...



ஜைனர்களிடையில் ஜொலிக்கும் ஒருவர்



எலி ஜோக்ஸ்!

சிறுகதை: வானவில்லின் வர்ணஜாலம் —கிரிஜா



"இப்போது எனக்கு
மிகப்பிடித்த
லக்ஸினுள்
மெய்மறக்கும் ஒரு
புதிய நறுமணம்
அடங்கியுள்ளது!"

என்கிறார் மஞ்சுளா

மனமகிழ்ச்சியூட்டும் புதிய நறுமணம் அடங்கிய மென்மையான லக்ஸை நீங்களும் விரும்புவீர்கள், அது சுத்தமானது, மிருதுவானது. உங்கள் மேனியை வழவழப்பாகவும் வனப்புடனும் வைக்கிறது—ஆம் மஞ்சுளாவைப் போன்றே.




**லக்ஸ்** சினிமா நடிகையரின் பரிசுத்தமான, மென்மை தரும் சோப்பு

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

HT-HLL-8495

## முதல் ஆண்டு நினைவு நாள்

**4 - 6 - 1975**



மணப்பாடம் ஹரிஹரய்யர்

**லக்ஷ்மி அம்மாள்**

(காலஞ்சென்ற பி. வி. சுப்பராம அய்யர் அவர்களின் மனைவி)

பம்பாயில் ஓர் ஆண்டுக்கு முன்பு சிவலோகப் பிராப்தியடைந்த எங்கள் அருமைத்தாயாரின் அன்பு ஞாபகார்த்தமாக அவரது மகன், மருமகன், பெண்கள் மாப்பிள்ளைகள், பேரக்குழந்தைகள் ஆகியோரின் நினைவு அஞ்சலி.

**பி. எஸ். ராமநாதன், பம்பாய்**




Stretch Centre, S.S. U-Back

Lace Bra, Foam cups,

New Look®

NO COMPLAINT BRASSIERE

## அழுத பிள்ளையும் சிரிக்கும்!

குழந்தைகளுக்கு பயோ - ஸால் உடனடியாக அற்புத மாறுதல் உண்டாக்கும்! இல்லந்தோறும் வளரும் குழந்தைகளுக்கு ஜீரண சக்தியை ஊக்க அவசியமான சிவாரணி. நன்கு சோதிக்கப்பட்டு, பல்லாண்டுகளாக நம்பகமானது என்று புகழ் பெற்ற பயோ - ஸால் எல்லா குழந்தைகளுக்கும் உதவுகிறது

குதூகலமான சூழ்நிலைக்கு பயோ-ஸால்







**பயோ-ஸால்®**

**கிரைப் மிக்சர்**



ஜே. & ஜே. டீஷேன்

லேபொரேட்டரீஸ் பிரைவேட் லிமிடெட்

ஹைதராபாத் - இந்தியா

றன. அவற்றின் இலைகள் வெள்ளியாகப் பெயருக்கேற்பத் தகதகத்துக் கொண்டிருக்கின்றன.

தொலைதூரக் காட்சியிலிருந்து கண்களை அகற்றி அருகே பார்த்தால், சாலை ஓரத்தில் ரோஸ் நிறத்தில் லில்லி ரக மலர்கள் காடாக மண்டிக் கிடக்கின்றன. ஒரு தண்டு, அதன் நுனியில் ஒரு பூ என்று ஏராளமாகத் தென்பட்டுக் கொய்யும் ஆசையைத் தூண்டுகின்றன. கை நிறையப் பறிக்கும்போது எதிரே சுள்ளி பொறுக்கிக் கொண்டு வரும் மாது ஒருத்தி, ''அதைப் பறிச்ச கையை வாயில் வைக்காதீங்க; பிப்பெடுக்கும்'' (அரிக்கும்) என்கிறாள். எச்சரிக்கை அடைகிறோம். இப்பால் கொய்யா மரமொன்றில் வெண்ணிற மலர்கள் நட்சத்திரக் கூட்டமாய்ப் பூத்துக் குலுங்குகின்றன. அப்பால் பொன்னிறச் சரக்கொன்றை கண்ணைப் பறிக்கிறது. இங்கே மே ஃப்ளவர் மரமொன்றில் காட்டுத் தீ போல் மலர்க் கூட்டம் பரவியிருக்கிறது.

ஒளி செய்யும் சித்திர விசித்திரங்கள், பலவித மணங்கள் தரும் மனோகர உணர்வுகள், மலர் இனங்களின் மயக்கும் வண்ணங்கள், இவற்றுடன் புள்ளினங்களின் பற்பல ஒலிகளும் நம்மைப் பின்தொடர்ந்து கொண்டே இருக்கின்றன. ஜுகல் பந்தி ! ஒன்று கார்வை கொடுத்துப் பாடுகிறது ; மற்றது டேக்கா கொடுத்து நிறுத்துகிறது ! வேறு ஒன்று கொஞ்சுகிறது, மீண்டும் வருவாயா என்று கேட்டுக் கெஞ்சுகிறது. அனைத்தையும் மிஞ்சும் தவளைக் குரல் ஒலியும் ஒரு பட்சிக்கு உண்டு. கால் மணி நேரத்துக்கு ஒரு தடவை கணக்காகக் கூவும் கடிகாரப் பறவை இது !

எண்ணி மாளாத ஒலி ரகங்கள் என்றாலும் கண்ணில் படும் பறவைகள் ஒரு சிலவே. ஒளியும் கலையில் ஒப்பற்றவை. ஆனால் இந்த அதிகாலைப் போதில் ஜன நடமாட்டம் இராது என்ற துணிவில் ஒரு மரத்தில் பறவைகள் கொட்டமடிக்கின்றன. பச்சைப் பசேலென்று ஒன்று, பழுப்பு நிறத்தில் ஏழு, ஆரஞ்சு நிற நெஞ்சுடன் ஒன்று, செம்பஞ்சை விஞ்சும் நிறத்தில் ஒன்பது. நீல நிறத்தில் இரண்டு, கரிய கூந்தல் நிறத்தில் நான்கு. சில தத்திச் செல்கின்றன, சில கொஞ்சிப் பிரிகின்றன, சில கிளைக்குக் கிளை தாவிப் பறக்கின்றன, வேறு சில மரத்தில் செங்குத்தாகவே ஏறுகின்றன. அடேயப்பா ! இவையெல்லாம் ஒரு நாள் என்ன, ஓராயிரம் நாட்கள் பார்த்தாலும் அலுக்கும் காட்சிகளா ?

திரும்பின பக்கமெல்லாம் காப்பித் தோட்டங்கள் (14,000 ஏக்கர்) என்பதால் மலிவாக இரண்டு கிலோ காப்பிக் கொட்டை வீட்டுக்கு வாங்கிப் போகலாம் என்று எண்ணினால் ஏமாற்றம்தான். காப்பி போர்டு அத்தனை கண்டிப்பான கண்காணிப்பு செய்கிறது. விளைச்சல் எல்லாம் போர்டிடம் போகும். பக்குவப்படுத்தித் தரம் பிரித்து ஒரே சீரான விலையில் அது விநியோகிக்கிறது.

உலக மார்க்கெட்டில் முதல் தரமானதாக மதிக்கப்படும் ஏர்க்காடு காப்பியை அங்கு முதன் முதலில் பயிர் செய்து புண்ணியத்தைக் கட்டிக் கொண்டவர் அன்றைய சேலம் கலெக்டர் காக்பர்ன்! 1820ல் தென் ஆப்பிரிக்காவிலிருந்து கொண்டு வந்து பரிந்து பரிந்து நட்டார். இன்று நாம் ருசித்து ருசித்து உறிஞ்சுகிறோம். மகராஜன் எங்கிருந்தாலும் நன்றாயிருக்க வேண்டும் என்று வாழ்த்துவதுடன், நில்லாது அவர் வாழ்ந்து, காப்பிச் செடி பயிர் செய்த 'கிரான்ஞ்ச்' என்ற இடத்தைப் பார்க்கவும் போனோம். 'கிரான்ஞ்ச்' என்றால் இன்று யாருக்கும் தெரியாது. ஸேட் பங்களா என்றால்தான் புரியும்.

ஸேட் ரொம்ப நல்லவர். ''ஆமாம், இது தான் கிரான்ஞ்ச். காக்பர்ன் கட்டிய பங்களா தான். என் தாத்தா காலத்தில் கை மாறியது. இன்று நான்தான் எஸ்டேட்டை நிர்வகிக்கிறேன்'' என்றார். ''ராபர்ட் கிளைவ் காலத்தில் கட்டப்பட்ட மாளிகை இது. அந்த நாளைய பாணி. இங்கே வந்து பாருங்கள், ஒரு கப்பல் போல் தோற்றம் அளிக்கும்'' என்று தோட்டத்தின் ஒரு மூலைக்கு அழைத்துப் போனார்.

''ஆமாம்'' என்று பலமாகத் தலையை ஆட்டினேன். ''கப்பல் போலவேதான் இருக்கிறது'' என்றேன். ''அதோ அது மேல் தளம், அந்தத் தூண் பாய் மரம், அந்த வலை வான கவர் அதில் விரித்துள்ள பாய் ! அடேடே ! கடல் அலைகள் மீதாக மிதப்பது போல்கூடத் தோன்றுகிறதே !''

இப்படி நான் கூறக் கூற ஸேட்டுக்கு ஒரே சந்தோஷம். நல்ல சந்தன வாழையாக ஒரு சீப்பு பறித்து என்னிடம் தந்தார். இன்னும் கொஞ்சம் நான் கப்பலை வர்ணித்திருந்தால் ஒரு தாரையே கூட என் தலையில் சுமத்தியிருப்பார் ! ஸேட் ரொம்பக் கெட்டிக்காரர். மண் வளம் முதல் வன வளம் வரை அவர் எந்தக் கேள்விக்கும் டக் டக் என்று பதில் கூறத் தயாராயிருந்தார். ஆனால் என்னிடம் கேள்விகளின் ஸ்டாக்தான் குறைவாக இருந்தது. வாழைப் பழத்தின் ஸ்டாக் அதிகமாயிருக்கவே ஒன்றை உரித்துக் கடித்தேன். அந்தச் சந்தன வாழைதான் எவ்வளவு ருசி ! எத்தனை பெரிது ! ஒரு பழம் சாப்பிட்டால் காலை ஆகாரம் வேண்டாம் ; இரண்டு சாப்பிட்டால் மதியஉணவுக்கும் குட் பை! மூன்று தின்றால் உடம்புக்கு ஆகாது, உஷார் !

(அடுத்த இதழில் முடியும்)

வங்க தேச விடுதலைப் போரின்போது பாரசூட் வீரராக விளங்கியவர் அவர். எங்கே போனாலும் யாரைச் சந்தித்தாலும் யுத்தக் கதைகளைக் கூறிச் சொல்வார்கள். அவருக்குச் சொல்லிச் சொல்லி அலுத்து விட்டது.

ஒரு பார்ட்டியில் ஒருவர் கேட்டார்: ''பாரசூட் உதவியுடன் குதிக்கும்போது பல மெய்சிலிர்க்கும் அனுபவங்கள் ஏற்பட்டிருக்குமே?''

''ஆமாம். ஒரு சமயம் ரொம்ப இக்கட்டான நிலை!''

''என்ன அது?''

''பூமியில் கால் பாவப் போகும் சமயம் ஓர் அறிவிப்புப் பலகை கண்ணில் தென்பட்டது: புல்லை மிதிக்காதே!''



# கோடைச் சிரிப்பு மலர்


ஐயோ! இந்த நட்சத்திரங்க ளைப் பார்க்கக் கண்கள் கூசுதே! நீல வானத்தைக் காணச் சகிக்கல்லையே! சந்தி ரனின் கிரணங்கள் என் உடம்பை எரிக்கிறதே!


என்ன! உன் காதல் மொழி விபரீதமாக இருக்கு!


யாருக்கு வேண்டியிருக்கு இந்தக் காட்சி? கருமேகக் கூட்டத்தையல்லவா எதிர் பார்க்கிறேன்! மழை கொட்ட வேண்டாமா?


பாகவதரே! அமிர்தவர்ஷணி ராகம் பாடுங்கோ! மழை வரட்டும்!
பாடறேன். ஆனால் தொண் டை வறண்டு கிடக்கு. ஒரு டம்ளர் ஜலம் கொடுங்கோ!


மழை வந்த வுடன் அவசியம் தரோம்; பாடுங் கோ!


டாக்டர் தரும் மிக்சரில் வெறும் ஜலம் தான் இருக்கு என்போம்! அந்த ஜலத்தை உத்தேசித்து மிக்சர் கேட்டால் மாத்திரைகளைத் தருகிறார்!


பால்காரர் அனுதாபிகள் சங்கம்
இங்கே பால்காரர்களுக்கு மட்டும் தண்ணீர் விற்கப் படும்!


பிரின்சிபால்


கலிகாலம் பார்த்தேளா?
போலீஸ் பந்தோபஸ்துடன்...


...பிரின்சிபால் போகிறார்


எப்படியாவது எங்கள் பிள்ளைகளுக்குக் காலேஜில் அட்மிஷன் கொடுக்கணும்!
பிரின்சிபால்


அம்மா! ஓடிவா! நீ சிரமப்பட்டு வாங்கி வந்த ஜலத்தை அப்பா விளையடிச்ண்டிருக்கா!
1


அப்படியா?
2


3


சாமா

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 45. தெய்வீகக் கலை

**இன்பமுடன் இசைந்த கலை**
**இறைவனுக்கு இசைந்த கலை**

**இசை உருக்கொண்ட கலை**
**இறைவனே கொண்ட கலை**

சோழ மன்னர்களின் காலத்திலிருந்து பரத நாட்டியக் கலை, வெவ்வேறு அரச குலத்தோரின் ஆதரவில், அரண்மனைகளிலும் ஆலயங்களிலும் வளர்ந்து வந்தது. அப்படி வளர்ந்த கலை தஞ்சாவூரின் பெருமைகளில் ஒன்றாகச் சிறப்புற்றது.

கடந்த நூற்றாண்டின் பின்பகுதியில் சரபோஜி மகாராஜாவின் வழித்தோன்றலான சிவாஜி மன்னரின் அரண்மனையில், காமாட்சி என்ற நர்த்தகி, அக்காலத்தில் குறிப்பிடுவது போல் ''சதிர்'' ஆடிக் கொண்டிருந்தார். காமாட்சி அம்மாளின் காலத்துக்குப் பிறகு, நாட்டியக் கலையும் அதற்கான ஆதரவும் நலிவுற்றன. அந்த அம்மாளின் வமிசத்தினர் நாட்டியத்தைப் புறக்கணித்துச் சங்கீதத்தில் கவனம் செலுத்தினர். அவருடைய குமாரி சுந்தராம்பாள் பாடகியாகப் பெயர் எடுத்தார். அடுத்த தலைமுறையில் தனம்மாள் வீணைக்கு ஒரு வாணியாகவும், அவருடைய குமாரி இன்னிசைக்கு ஒரு செல்வியாகவும் விளங்கினார்கள்.

ஜயம்மாளின் புதல்வி, பாலசரஸ்வதி, முன்பு விட்டகுறை வந்து தொட்டாற் போல், நாலு தலைமுறைக்கு முன்னால் நின்று போன பரதக் கலையைப் பயின்று, தமக்குப் பெரும் புகழ் தேடிக் கொண்டதோடு, அந்தக் கலைக்குப் புத்துயிரும், புது மதிப்பும், உலகப் புகழும் தேடிக் கொடுத்தார்.

கவி தாகூர் அமைத்த விச்வபாரதியின் டாக்டர் பட்டம், சங்கீத நாடக அகாதெமியிலிருந்து ஜனாதிபதி பரிசு, பாரத அரசாங்கத்தின் பத்ம பூஷண் பட்டம் ஆகியவற்றைப் பாலசரஸ்வதி அடைந்துவிட்டார். சென்னை சங்கீத வித்வத் சபை, தனது 1973ம் வருடத்திய மகாநாட்டுக்கு அவரைத் தலைவராய்த் தேர்ந்தெடுத்து, சங்கீத கலாநிதி என்ற விருதை வழங்கிற்று. இசைக் கலைஞருக்கு அல்லாமல் நாட்டியக் கலைஞருக்கு அந்தச் சபை அவ்வாறு கௌரவம் அளித்தது, அதன் நாற்பத்தாறு ஆண்டு வரலாற்றில் அதுவே முதல் தடவையாகும்.

தமது தலைமை உரையில் பாலசரஸ்வதி, பரதநாட்டியத்தில், இசையே கண்ணால் காணக்கூடிய உருவத்தை அடைகிறது என்றெல்லாம், அந்தக் கலையின் பெருமையை எடுத்துச் சொல்லிவிட்டு, தாம் அடைந்த முன்னேற்றம் பற்றிக் குறிப்பிட்டுக் கூறினார்:

இந்தக் கலை இழிவான நிலையிலிருந்து கௌரவமான ஒரு ஸ்தானத்துக்கு வந்திருப்பதையும் உலகம் முழுவதும் இதில் ஊக்கம் கொள்ளும் வகையில் வளர்ந்திருப்பதையும், என் வாழ்க்கையில் நான் பார்த்து வருகிறேன்.

1. சென்னை சங்கீத வித்வத் சபையின் சங்கீத கலாநிதி பட்டத்தைப் பெற்ற ஸ்ரீமதி பாலசரஸ்வதி, தலைமை உரையில் கல்கி, டி. கே. சி. ஆகியோரை நன்றியுடன் நினைவுகூர்ந்தார். படத்தில் பட்டம் பெற்ற பாலாவுக்கு மாலை அணிவித்து மகிழ்கிறார் ஸ்ரீமதி எம். எஸ்.



எனக்குத் துணையாக இருந்தவர் பலர். இந்தக் கலை இப்படிப்பட்ட கௌரவத்தை அடைய வேண்டுமென்று பாடுபட்டிருக்கின்றனர். உதாரணமாக, ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார், என் கச்சேரியை ஏற்பாடு செய்து இக்கலைக்கு விரோதமாக இருப்பவர் பலரை அழைத்து, இதன் மேன்மையை எடுத்துக் காட்டியிருக்கிறார். அதே மாதிரி கல்கி அவர்களும் ஆனந்த விகடனில் போற்றி எழுதி வந்தார்.

திரு வி. க. அவர்கள் ஒரு சமயம் என் கச்சேரியை ஒரு திருமணத்தில் ஏற்பாடு செய்திருந்தார். அப்போது டி. கே. சி. அவர்களும் கல்கி அவர்களும் இந்த நாட்டியத்தை எதிர்த்தார்கள். திருமணத்தில் இதை ஏற்பாடு செய்திருப்பதைக் கண்டு வியந்தார்கள். ஆனால் கச்சேரியைப் பார்த்தபிறகு தம் கொள்கையை மாற்றிக் கொண்டவர். இக்கலையில் அடங்கியிருக்கும் சாஸ்திரத்தையும் கட்டுப்பாட்டையும் கண்டு, ''இது ரஸமான உயர்ந்த தரத்தில் கையாளக்கூடிய கலை; இதில் கலை உணர்ச்சியோடு தெய்வீக அநுபவமும் தக்க முறையில் ஏற்படக் கூடும்'' என்று பிரசாரம் செய்து வாழ்த்தினார்கள்.

(சென்னை சங்கீத வித்வத் சபையின் 1973 மகா நாட்டு மலர்.)

டி. கே. சி., கல்கி ஆகியோரின் வெறுப்பை விருப்பாய் மாற்றிய பால சரஸ்வதியின் அந்தக் கச்சேரி 1923ல் நடந்தது. தமது மனமாற்றத்தைக் கல்கி எப்படிப் புலப்படுத்தினார் என்பதைப் பார்ப்போம்:

இருபது வருஷங்களுக்கு முன்னால் தமிழ் நாட்டில் சதிர்க் கச்சேரிகள் சர்வ சாதாரணமாக இருந்தன. பெரிய மனிதர்கள் வீட்டுக் கல்யாணங்கள் சதிர்க் கச்சேரி இல்லாமல் நடைபெறுவதில்லை. அப்போது நான் சிறு பையன். பக்கத்தில் நடந்த ஒரு பெரிய மனிதர் வீட்டுக் கல்யாணத்துக்குப் போயிருந்தேன். சதிர் நடந்தது. அங்கே கவனித்த இரண்டு விஷயங்கள் என் மனத்தில் ஆழமாய்ப் பதிந்தன. பல்லுப் போன கிழவர்கள் சபையின் முன்வரிசையில் உட்கார்ந்து, பொக்கை வாயை இளித்துக் கொண்டு பேசிய பரிகாசங்கள் ஒன்று. சபையின் ஓரத்தில் நின்று கொண்டிருந்த வாலிபர்களின் கூட்டத்தில் நடந்த சம்பாஷணை மற்றொன்று. சதிர்க் கச்சேரி மீது அப்போது எனக்கு உண்டான அருவருப்பு கொஞ்ச காலத்துக்கு முன் வரை இருந்து வந்தது....

ஹிந்திப் பிரசார சபையார் நடத்திய அபிமன்யு நாடகத்தில் ஸ்ரீமான் ஈ. கிருஷ்ணய்யர் ஆடிய நாட்டியத்தைப் பார்த்ததிலிருந்து அது ஓர் உயர்ந்த கலைதான் என்று தோன்றியது....

அடுத்த தடவை பரத நாட்டியக் கலையில் நன்கு



3. சிறுமி லக்ஷ்மியின் அரங்கேற்றத்தைக் கண்டு மகிழ்ந்து கல்கி விகடனில் எழுதினார். இன்று ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் புகழ்பெற்று விளங்குகிறார் லக்ஷ்மி.



4. 'அவருடைய உடையும் அலங்காரமும் மிகப் பொருத்தமாய் அமைந்திருந்தன.' (மாலி வரைந்த ருக்மிணி தேவி. நன்றி - ஆனந்த விகடன்)



2. பரதக் கலையைப் புனருத்தாரணம் செய்வதில் ஈடுபட்டிருந்த சிலருள் ஒருவர், ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அம்மாள்.



பிரபலஸ்தரை நிருபர் பேட்டி கண்டார்: "எண்பது வயது இளைஞராய் நீங்க இருப்பதன் ரகசியம் என்ன?"

"தினம் கொஞ்சம் பூண்டு சாப்பிட்டு வருகிறேன்."

"அடே! அப்படியா? அதை எப்படி ரகசியமா வைச்சிருந்தீங்க?"

oooooooooooooooooooooooooooooooo

தேர்ந்தவர்களால் சதிர்க் கச்சேரி நடைபெறும்போது போய்ப் பார்த்து விடுவதென்று தீர்மானித்தேன் — இருபது வருஷங்களாக நிலைத்திருந்த அருவருப்பை ஒருவாறு நீக்கிக் கொண்டு.

வீணை தனம்மாளின் பேத்தி ஸ்ரீமதி பால சரஸ்வதியின் பரதநாட்டியம் சமீபத்தில் நடந்தபோது அத்தகைய சந்தர்ப்பம் வந்தது. தற்போது தமிழ்நாட்டில் இக்கலையை நன்கு பயின்று திறமை பெற்றுள்ள சிலரில் இவர் ஒருவர் என்று தெரிந்தவர்கள் சொன்னார்கள்.

ஒரு விஷயத்தைப் பற்றி நன்கு ஆராய்ந்து தீர்மானத்துக்கு வருதல் சாத்தியமாயிற்று. அது, பரத நாட்டியக் கலையில் தூய்மைக் குறைவு அணுவளவும் இல்லை என்பதாகும். அதுவும் இக்காலத்து மேல்நாட்டு சினிமா, டாக்கி முதலியவைகளில் நாம் பார்க்கும் டான்சுகளுடன் ஒப்பிடும்போது, பரத நாட்டியம் தூய்மையில் சிறந்து விளங்குகிறது என்று சொல்லலாம்....

பரத நாட்டியம் ஓர் அருமையான உயர்ந்த கலை என்பதிலும் அதைக் காப்பாற்ற வேண்டியது அவசியம் என்பதிலும் இப்போது எனக்குச் சந்தேகமில்லை. (ஆ. வி. 28-8-33)

இவ்வாறு மனம் மாற்றம் கொண்ட கல்கி, பாலசரஸ்வதியின் கச்சேரிகளை அடுத்தடுத்து அனுபவித்து, அவைகளைப் பற்றி "ஆடல் பாடல்" பகுதியில் அடிக்கடி எழுதினார். மாலியைக் கொண்டு சித்திரங்கள் வரையச் செய்தும் வெளியிட்டார். "தெருவில் வாரானோ" என்ற முத்துத் தாண்டவரின் கமாஸ் பதத்துக்கு, பாலசரஸ்வதி வரிக்கு வரி அபிநயம் பிடிக்கும் ஃபோட்டோக் கோவை ஒன்றை 1935ம் ஆண்டு தீபாவளி மலரில் கல்கி வெளியிட்டார். அதுபோன்றதொரு நாட்டிய படக் கோவை அதற்கு முன்னால் எந்தத் தமிழ்ப் பத்திரிகையிலும் வந்தது கிடையாது.

பரதநாட்டியத்துக்கு உயரிய கலைக் கௌரவத்தை அளித்தவர் பால சரஸ்வதி என்றால், அத்துடன் அதற்கு உயரிய சமூக கௌரவத்தையும் அளித்தவர் ருக்மிணி தேவி. 1936ல் அவருடைய நாட்டிய அரங்கேற்றம் நடைபெற்றது. அதைக் கல்கி பார்த்து விட்டு விமரிசனம் எழுதுகையில், நாட்டியத்தை மட்டுமின்றி மேடை ஜோடனை முதலியன சம்பந்தமாய்ச் செய்திருந்த சீர்திருத்தங்களையும் குறிப்பிட்டார்.

"ஆடல் பாடல்" உலகத்தில் இந்த வருஷத்திய பெரிய விசேஷம் என்று சொல்லக் கூடிய சம்பவம் சென்ற ஞாயிற்றுக் கிழமை மாலை அடையாற்றில் நடைபெற்றது. தியாஸாபிகல் ஸொஸைட்டி தலைவரான டாக்டர் அருண்டேலின் மனைவியார் ஸ்ரீமதி ருக்மிணி தேவி.... ஒரு பெரிய சபைக்கு முன்னால் பரதநாட்டியம் ஆடினார்.

அடையாற்றைச் சேர்ந்தவர்களின் அழகு உணர்ச்சியும் ரசிகத் தன்மையும் பிரசித்தி பெற்றவை. அங்கே அமைந்திருந்த அழகிய நடன மேடையைப் பார்த்தபோது,

"ஆடரம்பை நீடரங் கூடுநின்று பாடலால்"

என்னும் கம்பன் பாட்டின் அடி எனக்கு நினைவு வந்தது.

ஸ்ரீமதி ருக்மிணி தேவி மேடையில் வந்து நின்றதும், இது தேவலோக நாட்டிய அரங்கம் தானோ என்று ஒரு கணம் பிரமை உண்டாயிற்று.

சாதாரணமான பரத நாட்டியக் கச்சேரிகளில் நட்டுவர்கள் நாட்டியக்காரிகளின் பின்புறம் நின்று மகா கோரணியான சேஷ்டைகளையெல்லாம் காட்டிக் கொண்டிருப்பது வழக்கம். அநேகருக்கு நாட்டியக்காரியின் அபிநயங்களை விட நட்டுவர்களின் சேஷ்டைகளே அதிக ரஸமாயிருக்கும். இங்கு அப்படியின்றி, நட்டுவர்களும், பக்கப் பாட்டுக்காரர்களும் மேடையில் ஒரு பக்கத்தில் நாகரிகமாய் அமர்ந்திருந்தார்கள்....

ஒரு கலையில் தேர்ச்சி பெறுவதற்கு அதனிடம் அபிமானமும், அதில் பயிற்சி பெற ஆர்வமும் மட்டும் இருந்தால் போதாது. ஒவ்வொரு கலைக்கும் இன்றியமையாத சில அம்சங்கள் இயற்கையில் அமைந்திருக்க வேண்டும். நடனக் கலைக்குரிய தேக அமைப்பு ருக்மிணி தேவி பெற்றிருக்கிறார்.

அவருடைய உடையும் அலங்காரமும் மிகப் பொருத்தமாக அமைந்திருந்தன. தமிழர்களின் பழைய நாகரிகத்துக்குரிய உடையும் அலங்காரங்களும்தான்; ஆனால் அவற்றில் புதுமையும் கலந்திருந்தது. கருத்த கூந்தலில் வெண்ணிற மல்லிகைப்பூ, காதில் ஜிமிக்கி, நெற்றியில் குங்குமம், கழுத்தில் ரத்தின ஹாரம், கால்களிலும் உள்ளங்கையிலும் செம்பஞ்சுக் குழம்பு ஆகிய எல்லாவற்றிலும் நமது பழைய நாகரிகம் புதுமை பெற்று விளங்கிற்று.

உடையும் அப்படித்தான். நடனத்துக்கு வசதியானது; அதே சமயத்தில் அசைப்பிலே பார்த்தால், புராதனத் தமிழ்ச் சிற்பி ஒருவன்

*1. ஃப்ளோரைடு, வாயில் உண்டாகும் அமிலங்களால் பல் எனாமல் கரைவதைக் குறைக்கிறது.

*2. ஃப்ளோரைடு, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் 'ஆஸிட் என்ஸைம்'களைத் தீவிரமாகத் தடுக்கிறது.

*3. ஃப்ளோரைடு, வளரும் பற்கள் சிதைவுற்று சொத்தை விழாமல் பாதுகாக்கிறது.

*4. ஃப்ளோரைடு, விளைப் பற்களைப் பளிங்குபோல் கெட்டிப் படுத்துகிறது.

# புதிய
# கோலினஸ் ஃப்ளோரைடு
# வாழ்நாள்
# முழுதும் பற்களுக்கு உறுதுணை!

**கோலினஸ் ஃப்ளோரைடால் பற்களுக்குப் பூரண பாதுகாப்பு**

கோலினஸ் ஃப்ளோரைடு பற்பசையில் கலந்துள்ள ஸோடியம்-மோனோ-ஃப்ளோரோ-ஃபாஸ்பேட் (எஸ்எம்எஃப்பி) வளரும் பற்கள் சிதைவுற்று சொத்தை விழாமலிருக்க அதிகப் பாதுகாப்பு அளிக்கிறது. ஏனெனில், எஸ்எம்எஃப்பி பல் எனாமலுடன் இணைந்து, பற்களைக் கெட்டிப் படுத்தி, பற்சிதைவு எற்படாமல் தீவிரமாக எதிர்க்கிறது.

**கோலினஸ் ஃப்ளோரைடு பெரியவர்களுக்கும் கூடப் பயனுள்ளது.**

கோலினஸ் ஃப்ளோரைடில் கலந்துள்ள எஸ்எம்எஃப்பி பல் எனாமலைத் தாக்கிப் பற்சிதைவைத் தோற்றுவிக்கும் 'பாக்டீரியா என்ஸைம்'களைத் தீவிரமாகத் தடுக்கவும் செய்கிறது.

எந்த சாதாரண பற்பசையும் சக்தி வாய்ந்த இத்தகைய அன்றாட பற்பராமரிப்பை உங்கள் குடும்பத்தாரின் பற்களுக்குத் தரமுடியாது. ஆனால் குளுமையான நறுமணச் சுவையுள்ள கோலினஸ் ஃப்ளோரைடு மட்டுமே இதைத் தருகிறது.




*1. 'ஃப்ளோரைடு அண்ட் ஹ்யூமன் ஹெல்த்', வர்ல்ட் ஹெல்த் ஆர்கனைசேஷன், ஜெனிவா, 1970, பக்கம் 203-206.
*2. அதே சஞ்சிகை-பக்கம் 206-210.
*3. அதே சஞ்சிகை-பக்கம் 305-308.
*4. அதே சஞ்சிகை-பக்கம் 205.

**கோலினஸ் ஃப்ளோரைடை மிஞ்சுவது பல் வைத்தியர் அளிக்கும் பராமரிப்பு மட்டுமே.**



கல்கத்தா, ஈஸ்டர்ன் ஸ்டீம் ஷிப்ஸ் பிரைவேட் லிமிடெட்டின் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ டி. எஸ். சுப்ரமணியம் அவர்கள் புதல்வன் சிரஞ்சீவி டி. எஸ். குமாருக்கும், பம்பாய், ஸ்ரீ K.H. சீதாராம் அவர்கள் புதல்வி சௌ. மைதிலிக்கும் பம்பாயில் சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

செய்த தேவமாதின் சிலை உயிர் பெற்று வந்தது போல் தோன்றும்...

பரதநாட்டியம் அபூர்வமான கலை; அதைக் கற்றுத் தேர்ச்சி யடைவதென்பது எளிய காரியமன்று. குழந்தைப் பிராயத்தி லிருந்தே அப்பியசித்தால்தான் சாதாரண மாய் அதை நன்கு பயில முடியும். ஸ்ரீமதி ருக்மிணி தேவி, அந்தக் கலையைக் கற்க முயன்று இவ்வளவு தூரம் வெற்றி யடைந் திருப்பது ஓர் அசாதாரணமான காரியம் என்றே சொல்ல வேண்டும்...

வீழ்ச்சி அடைந்திருக்கும் இந்த அரிய பெரிய கலையை உத்தாரணம் செய்வது ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் நோக்கம் என்று அறி கிறேன். இந்த நோக்கத்துக்காகவே தமிழ் நாட்டில் ஏற்கனவே சிலர் பெரு முயற்சி செய்து வருகிறார்கள். (ஆ. வி. 22-3-36)

அப்படி முயற்சி செய்தவர்களில் நாவ லாசிரியை வை. மு. கோதைநாயகி அம்மாள் ஒருவர். கல்விப் பள்ளிக் கூடங்களில் எல்லாம் பெண்களுக்குப் பரத நாட்டியம் பயில்விக்க வேண்டு மென்று யோசனை கூறி, வெகுவான எதிர்ப்பினிடையே பிரசாரம் செய்து கொண்டிருந்தார். அவருடைய யோச னையைக் கல்கி ஆமோதித்து எழுதினார். ஆனால் அந்தக் கலையைக் கற்பிக்கும் முறையில் சீர்திருத்தம் வேண்டும் என்றார்:

(பரத நாட்டியத்தைப்) பள்ளிக்கூடச் சிறுமிகளுக்கு இப்போதுள்ள முறையில் சொல்லிக் கொடுத்தல் சாத்தியமுமல்ல; உசிதமுமல்ல. பயிற்சி அளிக்கும் முறையை இன்னும் சுலபமாக்கினால்தான் முடியும். தெரிந்தவர்கள் கூடித்தீர்க்காலோசனை செய்து இன்னின்ன முறையில் இன்னின்ன அம்சங் களைச் சொல்லிக் கொடுக்க வேண்டுமென் பதை வகுத்து அதற்குரிய படித்தங்களை அமைத்தல் இன்றியமையாதது.

பரதநாட்டியம் ஓர் அழகுக் கலையாகும். ''பெண்ணாய்ப் பிறப்பதே பாவம்; அதிலும் அழகாயிருப்பது பாவம்'' என்ற கொள்கை யுடையவர்கள் கட்டாயம் பரதநாட்டி யத்தை எதிர்த்தே தீரவேண்டும். அதற்கு மாறாக, பெண் தெய்வங்கள் அழகுத் தெய் வங்களாகவும் விளங்க வேண்டும் என்ற கருத் துடையவர்கள் எல்லோரும் சிறுமிகளுக்கு நாட்டியம் சொல்லிக் கொடுக்கும் யோச னையை ஆதரிப்பார்கள். பரதநாட்டியம் சிறுமிகளுக்குச் சிறந்த தேகாப்பியாசமாகி ஒவ்வொரு உறுப்புக்கும் வலிமை அளிப்ப தோடு, சௌந்தரியத்தையும் தருகின்றது.

இது சம்பந்தமாக நியாயமாக ஏற்படக் கூடிய ஒரே ஆட்சேபம், ''பரதநாட்டியம் சிருங்கார ரஸத்தை அடிப்படையாகக் கொண்டது'' என்பதுதான். இது ஓரளவு உண்மையே. ஆயினும் சிருங்கார ரஸ அம் சத்தை விலக்கிவிட்டுக் குழந்தைகளுக்கு நாட் டியம் கற்பித்தல் சாத்தியம் என்றே நான் கருதுகிறேன். பாகவதம், நாயக நாயகி பாவத்தைப் பெரிதும் விஸ்தரிக்கும் நூல்தான். ஆயினும் குழந்தைகளுக்கு உரிய முறையில் ஸ்ரீ கிருஷ்ணனுடைய சரித்திரத்தை எடுத்துக் கூறுதல் சாத்தியமில்லையா? (ஆ. வி. 3-11-35)

இதைக் கல்கி எழுதிய சமயத்தில், நண்பர் ''ஹரிஜன்'' சாஸ்திரியின் வீட் டில் சதங்கை ஒலித்துக்கொண்டிருந்தது. சாஸ்திரியின் மூத்த குமாரி லக்ஷ்மிக்கு, பாலசரஸ்வதியின் குரு கந்தப்பா நாட் டியம் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந் தார். அந்தச் சிறுமி பயில்வதைச் சில சமயம் கல்கி காண்பதுண்டு. அப் போது மனத்தில் எழுந்த சீர்திருத்தக் கருத்துக்களைத்தான் மேலேயுள்ளபடி அவர் வெளியிட்டார் எனலாம்.

சிறுமி லக்ஷ்மியின் அரங்கேற்றத்தைக் கல்கி கண்டு மகிழ்ந்து அது பற்றி ஆனந்த விகடனில் எழுதினார். பின்னர் 1939 தீபாவளி மலரில் அவளுடைய நடனத் தோற்றப் படங்களை வெளி யிட்டார்.

அவற்றின் அடியில் அவர் எழுதி யிருந்த குறிப்பாவது: ''பரத நாட் டியத்துக்கு இப்போது நல்ல காலம் பிறந்திருக்கிறது. தமிழ்நாட்டுப் பெற் றோர்கள், தங்கள் பெண் குழந்தை களுக்கு நடனமும் பரத நாட்டியமும் சொல்லிக் கொடுப்பதில் வரவர அதிக உற்சாகம் காட்டி வருகிறார்கள்.''

இவ்வித உற்சாகம் காட்டும் பெற் றோர்களில் கல்கியும் ஒருவராகி, தமது மகள் ஆனந்திக்குப் பரதக் கலையைக் கற் பிக்க ஏற்பாடு செய்தார். முதலில் அவள் தனியாகவும் பின்னர் சதாசிவத்தின் குமாரி ராதாவுடனும் அதைப் பயின் றாள். இருவரும் அதில் தேர்ந்தியான தேர்ச்சி அடைந்து இணைந்து நிகழ்த் திய கச்சேரிகள் மிகச் சிறப்பாய் இருந் ததுடன், அந்தக் கலைமீதான ஆர்வம்

---

### சிரிப்பு பற்றி 'சீரியஸ்'ஸாக!

மனிதனின் இதயத்தைத் திறப்பது எது? அவனை அறியாமல் எழும் சிரிப்புதான்! -கார்லைல்

மனிதனின் தரத்தை அளப்பது வெகு எளிது. அவன் எதைச் சொன்னால் சிரிக்கிறான் எனப் பாருங்கள். -கதே

ஆயிரம் வருத்தங்களின் பாரத்தை நீக்கக்கூடியது ஒரே ஒரு இதழ்ச் சிரிப்பாகும். இதற்கீடான பொருள் உலகத்தின் எந்தச் சந்தையிலும் இல்லை! - லேம்ப்

சிரிப்பு என்பதே மனிதரோடு மனிதரை இணைக் கும் ஒரு காந்தக் கல். - ரேப்ஸ்பரி

தொகுத்தவர்: பிரபு தட்சிணாமூர்த்தி



வீட்டு எஜமானி புதிய வேலைக்காரியிடம் சொன்னாள்: "இங்கே வேலை செய்வதில் உனக்குக் கஷ்டமே இராது. இந்த வீட்டில் குழந்தைகளே கிடையாது!"

"எனக்குக் குழந்தைங்கன்னா ரொம்பப் பிடிக்கும்மா. எனக்காக வேண்டி நீங்க கட்டுப்பாடா இருக்கத் தேவையில்லை!" என்றாள் அவள்.

---

நாட்டில் மேலும் பரவவும் வகை செய்தன. (எப்படி என்பதைப் பின்னொரு அத்தியாயத்தில்விரிவாகக்காண்போம்.)

பரத நாட்டியக் கலை தமிழகத்தில் மறுமலர்ச்சி அடைந்த காலத்தில் மலர்ந்த இலக்கிய மலர் ''சிவகாமியின் சபதம்''. மற்றச் சிறப்பான அம்சங்களுடன், பரதக் கலையின் அக்காலத்து அருமை பெருமைகளைப் போற்றுவதாயும், அந்தக் கலையில் சிறந்த ஒரு செல்வியையே கதாநாயகியாய்க் கொண்டதாயும் உள்ள இந்த நவீனம், அந்தக் கலையின் இக்கால மறுமலர்ச்சிக்கு மேலும் மலர்ச்சி ஊட்டுவதாயும், மலர்ச்சியின் கலை மணத்துடன் இலக்கிய மணத்தைக் கூட்டுவதாயும் அமைந்தது. அத்துடன் பரதக் கலையுடன் நிலையாக இணைந்ததொரு நூலாகவும் திகழ்கிறது இது. மாமல்லத்துச் சிற்பபுரி, அதைக் காண்போரின் மனத்தில் எப்படிச் சிவகாமி கதையின் நினைவை எழுப்புகிறதோ, அப்படியே எந்தச் சிறந்த நாட்டிய நிகழ்ச்சியைக் காண்போரின் மனத்திலும் சிவகாமியின் நினைவு தோன்றுகிறது.

இந்த நாவல், ''தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே'' என்ற திருநாவுக்கரசர் பாடல் வரி ஒன்றுடன் நிறைவடைகிறது. கதாநாயகி மானிட நாதன் ஒருவனுக்கு நாயகி ஆகாமல், ஏகாம்பர நாதருக்கு நாயகி ஆகிறாள்; சிவகாமி சிவனையே அடைகிறாள்; தனது தெய்வமாக் கலையைத் தெய்வத்துக்கே காணிக்கை ஆக்குகிறாள்.

முன்பு மனிதக் காதலால் சஞ்சல நெஞ்சம் கொண்டிருந்த சமயத்தில் ஒரு நாள் தான் கற்ற கலையையும் அந்தக் கலைக்கு இலக்கணம் வகுத்தளித்த பரத முனிவரையும் வெறுத்துச் சினந்து பேசினாள். அதைக் கேட்டு வியப்பும் வருத்தமும் கொண்ட ஆயனச் சிற்பி சொல்லுவார்:

பரத முனிவரின் பேரில் கோபமா? சிவகாமி! நிருத்தியக் கலையில் நீ அபூர்வத் தேர்ச்சி அடைந்திருக்கிறாய். ஆனால் அந்தக் கலையின் பெருமையை நீ உணரவில்லை. நிருத்தியக் கலைதான் மற்ற எல்லாக் கலைகளுக்கும் அடிப்படை; சிவகாமி! அதனாலேதான் இதைத் தெய்வமாக் கலை என்றும், பிரம்ம தேவர் பரத முனிவருக்கு அருளிய 'நாட்டிய வேதம்' என்றும் சொல்கிறார்கள். நிருத்தியக் கலையிலிருந்துதான் சித்திரக் கலை உண்டாயிற்று. அதிலிருந்துதான் சிற்பக் கலை வளர்ந்தது. இசைக் கலைக்கும் நிருத்தியக் கலைதான் ஆதாரம்.

(முதல் பாகம் அத். 12)

இப்படி எல்லாக் கலைகளுக்கும் அடிப்படையானதும், அவற்றை அகத்திலும் அணைப்பிலும் கொண்டதாயும் உள்ள நாட்டியக் கலையின் வண்ணங்களை, சிவகாமியின் கதை தம் கற்பனையிலும் எழுத்திலுமாக வடிவம் கொண்டிருக்கையில் பல கலைவாணிகளின் ஆடல் கச்சேரிகளில் கண்டு அனுபவித்தவர் கல்கி. அந்தச் கச்சேரிகள் பற்றிய வர்ணனைகள் அவ்வப்போது அவர் எழுதிய விமரிசனங்களில் வந்தன. அவை நன்றாகத்தான் இருந்தன வென்றாலும், பத்திரிகையின் தேவையை எண்ணியும் அவசரமாயும் எழுதப்பட்டவைகளே. அதே கச்சேரிகளின் அனுபவங்களைப் பின்னர் அவர் ஓர் இலக்கியக் கலைஞராக, தமது மனத்தின் கலைக் கூடத்தில் வண்ண மணிச் சொற்களாய் மாற்றி, சிவகாமி நடன வர்ணனைகளில் அள்ளிப் பொழிந்தார். அற்புதமான அந்த வர்ணனைகளில் ஒன்று, திருநாவுக்கரசரின் மடாலயத்தில் அவருடைய முன்னிலையில், அவருடைய பாடல்களுக்கே சிவகாமி ஆடி அபிநயம் பிடிக்கும் காட்சியில் வருகிறது. (முதல் பாகம் அத். 35, 36.)

மற்றொன்று மண்டபப் பட்டுக் கிராமத்துச் சிவன் கோயிலில் ஆடியபோது.

(இரண்டாம் பாகம் அத். 35.)

இன்னும் ஒன்று, காஞ்சி அரண்மனைச் சபா மண்டபத்தில் விருந்தாளி வாதாபி சக்கரவர்த்திக்காக, மகேந்திர பல்லவர் அவளுடைய ஆடல் நிகழ்ச்சியை அமைத்தபோது.

(மூன்றாம் பாகம் அத். 14. 15.

இந்த வர்ணனைகளை முழுதுமாய்ப் படித்துப் பார்த்தால்தான், இவற்றின் இலக்கிய நயத்தை முழுமையாய் ரசிக்க முடியும். அதனால்தான் மாதிரிக்காகச் சில வாக்கியங்களைப் பிரித்தெடுத்து இங்கே கொடுக்கவில்லை. (தொடரும்)

இன்னிக்கி என் இன்டர்வியூவை
எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ?
எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக்
கேளுங்க, அனாஸின்
சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற
# சக்தி வாய்ந்த, நம்பகமான
# அனாஸின் சாப்பிடுங்கள்

**சக்தி வாய்ந்தது :** உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது :** டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல பல மருந்துகளின் கலவையே அனாஸின். ஆகையால்தான் லட்சக்கணக்கானவர்கள் அனாஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

*ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.*



சக்தி வாய்ந்த, நம்பகமான

# அனாஸின்

## இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி

# கற்பகமே கண் பாராய்!

சாருகேசி

சாரங்கனுக்குத் திடீரென்று வயிற்றில் புளியைக் கரைத்த மாதிரி இருந்தது. இதுநாள் வரை, குறைந்தபட்சம் சமையல் அறையில் எவர்சில்வர் பாத்திரத்தில்கூடப் புளி கரைப்பதைப் பார்த்திராதவன் சாரங்கன். அவனுக்கு, தன் சொந்த வயிற்றிலேயே புளி கரைப்பது மாதிரி இருந்தது என்றால்! கையைப் பிசைந்து கொண்டான். வலது காலை இடது கால் பாதத்தால் தூக்கிச் சொறிந்து கொண்டான் இப்படி இக்கட்டில் மாட்டிக் கொண்டு திருதிருவென்று விழிப்பது அவனுக்குப் புதிது இல்லையென்றாலும், மாமா வீட்டில் இப்படி மாட்டிக் கொண்டு, கற்பகத்துக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற முடியாமல் விழிவிழியென்று விழிப்போம் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை.

ஊரிலேயே அம்மாவுடன் இருந்து கொண்டு கிராமத்தில் 'ஹாய் ஹாய்' என்று ஆடு. இல்லாவிட்டால் மாடு மேய்த்துக் கொண்டு 'ஹாய்'யாக இருந்திருக்கலாமோ என்று தோன்றிற்று. கற்பகம் என்றொரு பெண்ணை, ஹிக்கின்பாதம்ஸ் புத்தக சாலையில் தமிழ்ப் புத்தகங்கள் வரிசையில் சந்திப்பானேன்!.... அவள் கண் பார்வைக்காகத் தவமிருந்து, புத்தகசாலை பூட்டுகிற வரை தமிழ் நாவல் தலைப்புக்களிலே மூழ்கியிருந்து வெளியே வந்த பிறகு அவளுக்கு ஆட்டோ ரிக்ஷா பிடித்துக் கொடுப்பானேன் ! ஐந்து ரூபாய்க்குச் சில்லறை கொடுப்பானேன் ! அப்புறம் தொடர்ந்து அதே இடத்தில் சந்திப்பானேன் ! இப்படி மாமா வீட்டில், மாமா பெண் நளினியிடம் வகையாக மாட்டிக் கொண்டு விழிப்பானேன் !....

''கைத்தல நிறைகனி அப்பமொ டவல் பொரி....'' என்று சத்தம் போட்டுப் பாடிக் கொண்டே வந்து சாரங்கனின் சிந்தனையைக் கலைத்தான் மாமா பிள்ளை ஜில்லு.

'' அப்பம் பொரி எல்லாம் சரிதான். டவல் எதற்கு அத்தான் ?'' என்று பெரிய தொரு சந்தேகத்தையும் சாரங்கன் முன் தொப்பென்று போட்டான் ஜில்லு.

'' அப்பம் பொரி எல்லாம் தின்றுவிட்டு விநாயகர் கையைத் துடைச்சுக்க! போடா மண்டூஸ்! சந்தேகத்தைப் பார் சந்தேகத்தை'' என்று ஜில்லுவின் தலையில் சாரங்கன் குட்டப் போக, ஜில்லு ஒதுங்கிக் கொள்ள, திடீரென்று அங்கே பிரசன்னமான நளினியின் தோளில் சாரங்கனின் கைபட்டு ஒரு ஐந்நூறு வாட் மின்சாரம் பாய....

'' நான் வேணுமென்றே வெட்டவில்லை! சத்தியமாய்க் வேணுமென்றே வெட்டவில்லை'' என்றான் சாரங்கன். ''இருந்தாலும் நீ பூதம் மாதிரி இங்கே திடீரென்று வந்துவிட்டே !''

பளீரென்று சிரித்தாள் நளினி. (அவள் சிரித்தாலும் அடித்தாலும் பளீரென்றுதான் இருக்கும். ஜில்லுவைக் கேட்டால் சொல்லுவான்.)

''இப்படித் தனியாக உட்கார்ந்து கொண்டு தலையைப் பிய்த்து விட்டுக் கொண்டால் ஒரு வேளை நிஜமாகவே பூதம் வந்தாலும் வந்து விடும் !'' என்றாள் நளினி.

''யாரு, மாமாவைச் சொல்கிறாயா ?''

''அக்கிரமம்!'' என்றாள் நளினி கோபமாக. ''ஒரு மருமான் தன் சொந்த மாமாவையே பூதம் என்று சொல்லிக் கேட்பது என் வாழ்க்கையிலேயே இதுதான் முதல் தடவை !''

''பரவாயில்லை. இனி கேட்கப் பழகிவிடும்'' என்ற சாரங்கன், ''ஓர் உபகாரம் செய்வேன், நளினி! மாமா கேட்ட பாலன்ஸ் ஷீட் தயார் பண்ணி வைத்துவிட்டேன். அவர் வந்தால் கொடுத்துவிடுகிறாயா ? எனக்கு அவசர வேலையொன்று இருக்கிறது. நான் ஓட வேண்டும் !'' என்றான் கூலிங்கிளாஸை எடுத்துக் கொண்டே.

''ஹய்யா ! ஓடப் போறயா அத்தான், நீ ஓடி நான் பார்த்ததே இல்லே. ஓடு, ஓடு பார்க்கலாம்!'' என்ற ஜில்லுவை ஒரு தடவை முறைத்துப் பார்த்தாள் நளினி.

''நீங்கள் எங்கேயும் போக முடியாது. இன்றைக்கு !'' என்றாள் நளினி, தீர்மானமாக. ''அப்பா வர நேரமாகும். அம்மா லேடீஸ் கிளப் ஆண்டு விழாவுக்குப் போயிருக்கிறாள். நான் தனியே துணை யாருமில்லாமல் இருக்கிறேன்.''

''அதுதான் ஜில்லு இருக்கிறானே ?''

''ஆமாம், ஜில்லுவுக்குப் பிரமாத வயதாகிறது. பெரிய துணைதான் போங்கள் !''

''ஐயோ, நான் போக வேண்டும், வெளியே போயே ஆகவேண்டும் !'' என்று தலையை மோதிக் கொள்ளாத குறையாக முறையிட்டான் சாரங்கன்.

'' நீங்கள் எங்கே போகப் போகிறீர்கள் என்று எனக்குத் தெரியும் !'' என்று நளினி சொன்னதும் சாரங்கனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'தெரிந்துவிட்டதோ இவளுக்கு? அட கஷ்டமே, கற்பகம் அங்கே ஹிக்கிம் பாதம்ஸ் வாசலில் காத்துக் கொண்டு நிற்பாளே! இப்படி மாட்டிக் கொண்டுவிட்டோமே !... கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டுவதற்கு முன்னாலேயே நளினி இப்படிக் கோடு கிழித்துவிட்டுத் தாண்டாதே தாண்டாதே என்கிறாளே, ஹே பகவான், நான் எப்படி இந்த இருபத்தெட்டு வருஷங்கள் போக இனி மீதி ஆயுளைக் கழிப்பேன்!'.....

நல்லவேளையாக உள்ளே போன் மணி அடித்ததும், முகத்தில் புத்தொளி மின்ன,

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

'உங்க பையன் இங்கிலீஷ் பேப்பர்லே பாஸ் தமிழ்ப் பேப்பர்லே பெயில் என்கிறீரே, தமிழ் நன்றாகப் படிக்கச் சொல்லப்படாதோ?''

''நான் இங்கிலீஷ் நாளிதழிலேயும் தமிழ் நாளிதழிலேயும் ரிசல்ட் வந்ததைக் குறிப்பிட்டேனய்யா!''

''உனக்குத்தான் நளினி !'' என்று சாரங்கன் சொல்ல, 'நான்தான் எடுப்பேன்!' என்று ஜில்லு முந்திக் கொண்டு ஓட, இதுதான் சமயம் என்று சாரங்கன் வெகு அழகாகக் கம்பி நீட்டினான்.

''இங்கேதான், இங்கேதான்....!'' என்றான் சாரங்கன், டாக்ஸி டிரைவரிடம், ஹிக்கின்பாதம்ஸ் வந்ததும். மீட்டரைப் பார்த்து ரூபாயைக் கொடுத்துவிட்டு, கற்பகத்தைக் காணாததில் ஒருவிதத்தில் வருத்தமும், நல்லவேளையாக அவளைக் காக்க வைக்கவில்லை என்று மகிழ்ச்சியும் ஒரு சேர, தலையை அப்படியும் இப்படியும் சுழற்றிப் பார்த்தான்.

''மெள்ள... மெள்ள...! முகம் சுழன்று முதுகுப் பக்கம் போய்விடப் போகிறது !'' என்று ஒரு மென் குரல் வந்ததும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்: கற்பகம் !

'' இதுதான் ஐந்து மணிக்கு வருகிறதாக்கும் ? அங்கே உங்கள் மாமா பெண் நளினியைப் பிரிந்து வர மனசில்லையோ ?''

''ஹா !'' என்றான் சாரங்கன். ''யார் சொன்னது உனக்கு ?.... மாமா பெண் என்று? நளினி என்று?'' எனத் திணறினான்.

''யார் சொல்ல வேண்டும் ? உங்கள் நளினியேதான் சொன்னாள். ஒரு மாமா. அவருக்கு ஒரு பெண். அவர் வீட்டில் பி.ஏ. பாஸ் செய்த ஒரு மருமான் ! வெண்ணெயைக் கையில் வைத்துக் கொண்டு யாராவது நெய்க்கு அலைவார்களா ? இல்லை, உங்கள் மாதமாடிக்ஸ் பாஷையில் சொன்னால், ஒன்றும் ஒன்றும் இரண்டு ! என்னை மறந்து விடுங்கள் மிஸ்டர் சாரங்கன் !'' என்று கோபத்துடன் புறப்படவிருந்த கற்பகத்தைக் கையைப் பிடித்து இழுத்து நிறுத்தினான் சாரங்கன்.

''என்னை நம்பு கற்பகம்! நளினியை நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போவதில்லை. நிச்சயமாக. சத்தியமாக.''

'' நீங்கள் சொல்லிவிட்டால் போதுமா ? உங்கள் மாமா விடவேண்டும் உங்களை.... உங்கள் அம்மாவின் கெஞ்சல் உங்கள் மனசை மாற்றாமல் இருக்க வேண்டும் !.... நல்லவேளை நானாக உங்கள் விலாசம் தெரிந்து கொண்டு போன் செய்தேனே, உங்கள் நளினி எல்லாவற்றையும் கொட்டித் தீர்த்தாளோ! ஃபர்கெட் மீ மிஸ்டர் சாரங்கன்! விஷ் யூ ஏ ஹாப்பி மாரீட் லைஃப்!''

''சாரங்கா !'' என்று கூப்பிட்டார் மாமா மாத்ருபூதம்.

---

''முகூர்த்த நேரம் வரலையே; அதற்குள் தாலி கட்டச் சொல்லிக் குதிக்கிறேனே!''

''பையனுக்குப் பேப்பர்லே ரிஸல்ட் வந்திருக்கே!''







"என் அப்பா உடம்பில் உயிருள்ளவரை..."
"என்ன செய்வீங்க? அவருக்குப் பணிவிடையா?"
"சேச்சே! அவர் சொத்துக்காகப் போராடுவேன்!"

— உஷா

---

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு அவர் முன் வந்தான் சாரங்கன்.

"இதோ பார், வருடாந்தர ஆடிட்டுக்கு வரப் போகிறார்கள், நம் கம்பெனியில்...... சீஃப் அக்கவுண்டெண்ட் எல்லாவற்றையும் கவனிக்க முடியாது. நீதான் ஒரு வி. ஏ. ஆயிற்றே. நம் கம்பெனி அக்கவுண்ட்ஸ் டிபார்ட்மெண்டிலிருந்து ஸ்ரீதர் என்று ஒரு பையன் வருவான் இங்கே. ரியலி ஸ்மார்ட் ஃபெல்லோ. அவனுக்குக் கொஞ்சம் தைரியம் கொடு. எல்லாம் தெரிந்த மட்டும் சொல்லிக் கொடு.... நான் ரொம்ப பிஸி. தெரிந்ததா? தினசரி மாலையில் ஸ்ரீதர் வருவான். ஓகே ?"

"எஸ் மாமா!" என்றான் சாரங்கன். வேறு வழி ?

ஆரம்பத்தில் கொஞ்சம் பயந்த சுபாவமாகத் தென்பட்டான் ஸ்ரீதர். வந்த முதல் நாள், "சாரங்கன் சார்! ஆடிட்டர்கள் வருகிறார்களே, அப்படி என்ன சார் கேட்பார்கள்?" என்றுகூடக் கேட்டான்.

"திருக்குறளிலே புலால் உண்ணாமை என்கிற அதிகாரத்திலேயிருந்து நாலு குறள் சொல்லச் சொல்லுவார்கள்!" என்றான் சாரங்கன் கோபத்துடன்.

" திருக்குறள் 1330ம் எனக்குத் தலைகீழ்ப் பாடம் சார் ! பரிமேலழகர் முதல் பாரதிதாசன் வரை, உரைகூடச் சொல்வேன் !" என்று ஸ்ரீதர் திருப்பி ஒரு போடு போட்ட போதுதான் சாரங்கன் அவனைச் சரியாக எடை போடத் தொடங்கினான். ஸ்மார்ட் ஃபெல்லோ! இன்னும் நாலு வருஷங்களில் மாமாவுடைய கம்பெனி சீஃப் அக்கவுண்டெண்ட் ஆனால்கூட ஆச்சரியப்படுவதற்கில்லை !.......

ஸ்ரீதர் வருகிற மாலை நேரங்களில், முன்பெல்லாம் சரியாகக் காத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த சாரங்கன், மெல்ல மெல்ல ஜில்லுவைச் சரிக்கட்டி எப்படியோ வெளியே தப்பித்துப் போக ஆரம்பித்தான்....

அந்தச் சனிக்கிழமை ஹிக்கின்பாதம்ஸில் கற்பகம் நின்று கொண்டிருப்பதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை சாரங்கன். அவளைக் காணத்தான் இத்தனை நாட்களாக எப்படித் தவித்துக் கொண்டிருந்தான்! எத்தனை நாள், எத்தனை தடவை, அந்தப் புத்தகசாலையைச் சுற்றிச் சுற்றி வந்திருக்கிறான்!

"கற்பகம்!" என்று சற்று உரக்கவே கூப்பிட்டபோது, திரும்பிப் பார்த்து ஒரு புன்னகையோடு நிறுத்திக் கொண்டாள் கற்பகம்.

"உன்னை எத்தனை நாட்கள், எங்கெல்லாம் தேடுவது ? ஒரு முக்கியமான விஷயம் சொல்லத் துடித்துக் கொண்டிருக்கிறேனே!"

"ஏன், உங்கள் கல்யாணப் பத்திரிகைக் கவர் ஒன்றில் மிஸ் கற்பகம் என்று எழுதி வைத்துவிட்டு, அதை அடித்து விளக்க மனமில்லாமல் என்னைத் தேடுகிறீர்களா ?"

" ஆஹா, என்னமாய் வசனம் பேசுகிறாய், கற்பகம் ! சட், வெளியே வா ! வாயேன், சொல்கிறேன் !"

"சரி, சொல்லுங்கள். போர் அடிக்காமல் சொல்லுங்கள்!"

"யூ நோ, நான் தப்பித்துக் கொண்டுவிட்டேன் !"

அவனையே விநோதமாகப் பார்த்தாள் கற்பகம். "ஏன், இத்தனை நாட்கள் வேலூர் அல்லது கீழ்ப்பாக்கத்தில் இருந்தீர்களா ?"

"உன் கிண்டல் கிடக்கட்டும். நளினிக்கு ஏற்ற ஒரு கணவன் பார்த்தாயிற்று. பெயர் : மிஸ்டர் ஸ்ரீதர். மாமாவின் கம்பெனியிலேயே அக்கவுண்ட்ஸ் டிபார்ட்மெண்டில் ஜூனியர் அக்கவுண்டெண்ட். மாமா அவனுக்கு, ஆபீஸ் ஆடிட்டிங்குக்கு முன்னால் வீட்டுக்கு வரச் சொல்லிக் கொஞ்சம் உதவி பண்ணச் சொன்னார். யூ நோ வாட் ஐ டிட்? பத்து நாட்கள் ரொம்பப் பொறுமையாக அவனுக்காகக் காத்துக் கொண்டு வீட்டில் இருந்தேன். வந்ததும் எல்லாம் சொல்லிக் கொடுத்தேன். அப்புறம் மருமான் ஜில்லுவிடம் கையைக் காட்டி விட்டேன்...."

"ஜில்லுவா? அவனிடம் ஸ்ரீதர் என்ன கற்றுக் கொள்ள முடியும் ?"

"அங்கேதான் இருக்கிறது விஷயம்—ஜமீன் விஷயம் ! ஜில்லு என்ன பேசுவான் அவனிடம்? ஹிந்தி சினிமா பாடகர்களில் யார் உசத்தி — கிஷோர் குமாரா, முகேஷா, ரஃபியா என்று சர்ச்சை பண்ணுவதைத் தவிர வேறு என்ன தெரியும்? இந்த ஹிந்தி சினிமாப் பாட்டுக்கள் விஷயத்தில் நளினி ஒரு பைத்தியம், தெரியுமோ உனக்கு? நளினி இவர்கள் பேச்சில் கலந்து கொள்வதும், ரஃபிக்கு ஆதரவாகப் பேசுவதும், லதா மங்கேஷ்கரும், ரஃபியும் பாடும் டூயட்டுகளில் இருவரும் எப்படி உணர்ச்சி பொங்கப் பாடுகிறார்கள் என்பதை விவரிப்பதும், இடையே ஸ்ரீதரும் நளினியுமே அந்த டூயட்டுக்களைப் பாடிப் பார்ப்பதும் ஜில்லு மூலம் எனக்குத் தெரிந்தது.... ஏன், மாமிகூட ஸ்ரீதருக்குத் தினம் அவன் வரும் வேளைகளில் எல்லாம் விழுந்து விழுந்து உபசரிக்கிறாளாம்.... இதிலிருந்து என்ன தெரிகிறது உனக்கு?"

"நளினி நன்றாகப் பாடுவாள் என்று தெரிகிறது. மிஸ்டர் ஸ்ரீதரும் நன்றாக டூயட் பாடுவார் என்று தெரிகிறது !"

"கொழுப்பைப் பார் ! அதற்கு மேல் ஒன்றுமே தெரியவில்லையாக்கும்?" என்று அவள் கன்னத்தைச் சாரங்கன் நிமிண்டப் போக, "உஷ்" என்று ஒதுங்கிய கற்பகத்துக்கு, நேரே கையைக் காட்டினான் சாரங்கன்.

அவன் காட்டிய திசையில், ஜில்லு காவலுக்கு(?) வர, நளினியும் ஸ்ரீதரும் எதிர்ச் சாரியில் உள்ள சினிமாத் தியேட்டர் ஒன்றிலிருந்து வெளியே வருவது தெரிந்தது.

"அதோ பார், நளினி—ஸ்ரீதர் ! பின்னால் ஜில்லு!" என்று கூவினான் சாரங்கன்.

" என்றைக்கு மாமாவிடம் சொல்லப் போகிறீர்கள் ?" என்று கற்பகம் நாணத்துடன் கேட்டபோது, "நளினி—ஸ்ரீதர் விஷயம்தானே ? இன்றைக்கே, இன்றைக்கே!" என்றான் சாரங்கன் அவளை வேண்டுமென்றே சீண்டுகிற மாதிரி.




**வெ**ங்கட் என்ற வெங்கட்ராமன் தன்னுடைய இஷ்ட தெய்வங்களை யெல்லாம் வெருவாய் வேண்டியபடி அந்தப் பங்களாக் காம்பவுண்டுக்குள் நுழைந்தான். வாசலில் யாருமே இல்லை. வலது பக்கம் திரும்பி நடந்தான். ஆ! எவ்வளவு பெரிய ரோஜாத் தோட்டம்! தேவியின் தந்தை பெரிய எஸ்டேட் முதலாளி மட்டுமில்லை, பெரிய கலா ரஸிகராய் இருப்பார் போலிருக்கிறதே என்று வியந்தபடி இன்னும் சற்று உள்ளே முன்னேறி நடந்தான்.

நான்கு நாட்களுக்கு முன்னால் மேல் குன்னூரில் லேம்ப்ஸ் ராக்கில் நடந்த நிகழ்ச்சிகள் அவன் கண் முன்னால் பனிச் சிட்டன.

வெங்கிட்டு என்ற வெங்கட்ராமன் மகா சுறுசுறுப்பான இளைஞன். "பாங்க் ஆப் பக்கோடா"வின் ஊட்டிக் கிளை மானேஜராய் அவன் திறமையைக் கருதி நியமிக்கப்பட்டிருந்தான். இரண்டு மாதம்கூட ஆகவில்லை, அதற்குள் அவன் தலைமை ஆபீஸிலிருந்து இருபது கடிதாசுகளுக்கு மேல் அவனுக்கு வந்துவிட்டன, எப்படியும் பாங்கின் டெபாஸிட் தொகை சில பல லட்சங்களை எட்டிப் பிடித்தாக வேண்டும் என்று. அவனுக்கே தெரியும், தனக்கு ஊட்டிக் கிளையில் இந்தப் பதவி கொடுக்கப்பட்டதே, ஊட்டி, குன்னூர் ஏரியாவில் இருக்கும் எஸ்டேட் சொந்தக்காரர்களை வளைத்துப் பிடித்து அவர்களிடம் லட்சக்கணக்கில் டெபாஸிட்டுக்களைக் கறக்க வேண்டும் என்பதற்காகத்தான் என்பது.

□□□□□□□□□□□□□□□□□□□

பாகவதர் 1: கச்சேரி ஆரம்பிச்சப்புறம் சத்தம் போட்டுண்டே உள்ளே வராங்களே அவங்களைக் கண்டாலே எனக்குப் பிடிக்காது!

பாகவதர் 2: அவாளாவது பரவாயில்லையே! பாதிக் கச்சேரியிலே சத்தம் போடாமே வெளியிலே எழுந்து போயிடறாளே அவாளைத்தான் எனக்குப் பிடிக்காது!

— உ. வி.



கோடை விடுமுறைக்குத் தான் குன்னூருக்கு வரப் போவதாய்த் தேவி எழுதியிருந்ததும் அவனுக்கு ஒரு ஐடியா உதித்தது. தேவியின் தந்தை குன்னூரில் ஒரு பெரிய டீ எஸ்டேட் சொந்தக்காரர். தேவி மனம் வைத்து அவள் தந்தையிடம் சொன்னால்....

"ஆ! அதோ பாருங்களேன்.... அந்த ரயில் போவது மரவட்டை ஊர்ந்து போவது போல இல்லை?" என்று கையைக் கொட்டியபடி குதூகலித்தாள் தேவி.

ஊட்டியிலிருந்து வாரா வாரம் குன்னூர் லேம்ப்ஸ்ராக்கிற்கு வந்து பார்த்துப் புளித்துப் போன காட்சி வெங்கட்டுக்கு.

அசுவாரசியத்துடன் 'ச்சு'க் கொட்டினான் அவன்.

"தேவி! ரயில் கிடக்கட்டும் இந்த இடத்துக்கு 'லேம்ப்ஸ் ராக்' என்று ஏன் பெயர் வந்தது தெரியுமா?"

"தெரியாதே! ஏன்?"

"லேம்ப் என்ற இங்கிலீஷ்காரன் தன் காதல் தோல்வியைப் பொறுக்க முடியாமல் இங்கிருந்து குதித்துத்தான் தற்கொலை செய்து கொண்டானாம். அதோ கீழே ஓர் அம்புக்குறி தெரிகிறது பார். அதுதான் அவன் மண்டை பாறையில் மோதிச் சிதறிய இடம்" என்று அவன் கீழே சுட்டிக் காட்டியபோது தேவி உடலைச் சிலிர்த்துக் கொண்டாள்.

"இன்னும் சிறிது காலத்தில், இப்போது இங்கிலீஷ் பெயர்களை எல்லாம் தமிழ்ப் பெயர்களாய் மாற்றுகிறோம், இல்லையா? அதுபோல் இந்த லேம்ஸ் ராக் என்ற பெயர் 'வெங்கட் ராக்' என்று மாறினாலும் ஆச்சரியமில்லை..." என்றான் வெங்கட் சோகமாய்.

"ஏன்? ஏன்?" என்று துடித்தாள் தேவி.

"பின்னே..... நான் இந்த இடத்திலிருந்து விழுந்து மண்டை சிதறிப் பரலோகம் போனால் 'வெங்கட் ராக்' என்று பெயர் வைத்துவிட வேண்டுமில்லையா?"

"வெங்கட்.... வெங்கட்.... அப்படியெல்லாம் பேசாதீர்கள். என் அப்பாவிடம் நம் விஷயத்தை எப்படிச் சொல்வது என்றே புரியவில்லை......"

''அதெல்லாம் எனக்குத் தெரியாது தேவி. நம் காதல் விவகாரத்தைச் சொல்லு அவரிடம். அதற்கு முன்னால் இந்த டெபாஸிட் விஷயம் ரொம்ப முக்கியம். எங்கள் பாங்கில் டெபாஸிட்டுகள் விஷம்போல் ஏறவில்லை என்றால் எனக்கு வேலை கிடையாது. எனக்கு வேலை இல்லை என்றால் உன்னைக் காதலித்துத்தான் என்ன பயன்? திருமணம்கூடச் செய்து கொண்டுதான் என்ன பயன்? எனவே, 'வெங்கட் ராக்' என்ற பெயர்.....''

''இருங்கள்... இருங்கள்.... டெபாஸிட்டைப் பற்றிச் சொல்ல எனக்கு ஆட்சேபணை இல்லை. ஆனால் அவருக்கு இந்த இன்ஷ்யூரன்ஸ் ஏஜெண்ட், பாங்க் ஏஜெண்டுகளைக் கண்டாலே பிடிக்காது.''

''நான் பாங்க் ஏஜெண்ட் இல்லை..... மானேஜர்!''

''சரி..... ஏதோ ஒன்று. தொப்புளைச் சுற்றிப் பதினெட்டு ஊசி போட்டுக் கொள்ளத் தைரியம் இருந்தால் சொல்லுங்கள். நானைக்கே வீட்டுக்கு வாருங்கள்.''

''என்ன சொல்லுகிறாய் நீ?'' என்று குழம்பினான் வெங்கட்.

''பின்னே? அவரிடம் அல்சேஷன் ஒன்று இருக்கிறது. இப்படித் தனக்குப் பிடிக்காத ஆசாமிகளைக் கண்டால் அதை அவர்கள் மேல் ஏவி விட்டு விடுவார்.....''

''ஏய்.... ஏய்.... தேவி.... ப்ளீஸ்... ப்ளீஸ்...... என் எதிர்காலமே... ஏன்....? நம் எதிர்காலமே இதில்தான் இருக்கிறது'' என்று அவளிடம் கெஞ்சிக் கூத்தாடியபோது ஒரு' வழியாய் அவள் தன் தந்தையிடம் அவன் பாங்கில் டெபாஸிட் பண்ண வேண்டிய அவசியத்தை வலியுறுத்திப் பேசுவதாக வாக்களித்தாள்.

பின்பு மூன்று நாட்கள் பேச்சு மூச்சில்லை அவளிடமிருந்து. இன்று டெலிபோனிலேயே அவளிடமிருந்து அழைப்பு வந்தது குன்னூருக்கு, அவள் பங்களாவுக்கு வரச் சொல்லி.

''ஹலோ.... வெங்கட்... வாருங்கள்....''

திடீரென்று ஒரு பெரிய ரோஜாப் புதரின் பின்னாலிருந்து தேவி ஒயிலாய், மயிலாய் ஒசிந்து ஒசிந்து நடந்து வந்தாள். (அது எப்படி என்று என்னைக் கேட்கக் கூடாது. தேவிக்குத்தான் தெரியும், ஒசிந்து ஒசிந்து நடப்பது எப்படி என்று!)

''ஆ! தேவி! என்ன ஆயிற்று? எங்கே உன் அப்பா? எல்லாவற்றையும் சொன்னாயா?'' என்று பறந்தான் வெங்கட்.

''ஓ! வெங்கட்.... உண்மையிலேயே உங்களுக்கு நல்ல நேரம்தான். நல்ல 'மூடில்' இருந்தார். உங்கள் டெபாஸிட் விஷயத்தை ஏன் 'நம்' விஷயத்தையும்கூட இலேசாய்ச் சொல்லியிருக்கிறேன்..... சிக்கிரம் இப்படியே போங்கள்'' என்று முகம் மலரக் கூறினாள் தேவி....

''இதோ....'' என்று அவள் காட்டிய பாதையில் நடந்தான் வெங்கட்.

அவர், ஸ்ரீமான் நரசிம்மன், தோட்டத்தில் ஒரு மூலையில் ஏதோ ஒரு ரோஜாச் செடியை ஒரு கையாலும், தாம் ஆசையுடன் வளர்க்கும் அல்சேஷனை மறு கையாலும் வருடியபடி ஏதோ கனவில் மூழ்கியிருந்தார்.

வெங்கட் டையை வருடியபடி மகா பவ்வியமாய் அருகே சென்று, ''சார்.... சார்....'' என்று விளித்தான் அவரை. அல்சேஷன் இலேசாய் உறுமியது. திரும்பினார் ஸ்ரீமான் நரசிம்மன்.

உடனே துள்ளினார் அவர். முகம் ஜிவுஜிவு என்று சிவக்க நிஜ நரசிம்மாவதாரம் எடுக்க ஆரம்பித்தார் அவர்.

''ஏய்.... ஏய்.... தேவி சொன்ன பாங்க் ஏஜெண்ட் நீயா? ஏய் ....உனக்கு டெபாஸிட்டா வேணும்?''

வெங்கிட்டுவின் கால்கள் தொய்ந்தன. குரல் மங்கிற்று. கண் பார்வை அதைவிட மங்கியது.

''சார்..... சார்..... சார்.....'' என்று ஈனஸ்வரத்தில்.....

''சாரா.... இதோ பார்.... கமலா!'' என்று கதறினார் அவர். சரி.... தேவியைப் போல் இன்னொரு பெண்ணும் கமலா என்று அவருக்கு இருப்பாள் போல் இருக்கிறது என்று எண்ணிய வெங்கிட்டு மறு விநாடியே அது எவ்வளவு பெரிய தவறு என்று தன்னை நோக்கித் தாவிய அல்சேஷனைக் கண்டு தெரிந்து கொண்டான்.

குன்னூர் 'ஸிம்ஸ்' பார்க் பெஞ்ச் ஒன்றில் சோர்ந்து கிடந்தான் நம் இளம் கதாநாயகன் வெங்கட். அவனுக்குப் பசி குடலைக் கொத்திப் பிடுங்கியது. அவன் கையில், பையில் பைசா கிடையாது. அவனிடமிருந்த பணம், ஸ்கூட்டர் சாவி எல்லாம் அவன் ப்ரீஃப் கேஸில் இருந்தன. அந்தப் பையோ நரசிம்மாச்சாரியின் தோட்டத்தில் ஏதோ ஒரு மூலையில் கிடந்தது.

திடீரென்று அவன் கண்களில் புத்தொளி பறந்தது. அருமையான மாங்கனிகள் பெருத்த அளவில் முற்றிக் கனிந்து மத்தியான சூரிய ஒளியில் மின்னி அவனை நோக்கிக் கண் சிமிட்டின. அதில் ஒரு சின்ன சங்கடம் என்னவென்றால் அந்த மாமரம் அந்தப் பார்க்கை ஒட்டிய பக்கத்துப் பங்களாவின் தோட்டத்தில் இருந்ததுதான். ஆனால் வெங்கட் சுவரில் ஏறிவிட்டால், அது எட்டிப் பறிக்கும் தூரம்தான். சுற்றுமுற்றும் பார்த்தான் வெங்கட். யாரையும் காணவில்லை. ஆ! அந்த மாமரத்தின் அண்மையில் எவ்வளவு பெரிய ரோஜாத் தோட்டம்! திடீரென்று தோட்டத்தின் மூலையிலிருந்து 'லொள்... லொள்...' என்று பயங்கரமாய் ஒரு நாய்

முனியன் வேலையை இழந்து விட்டான் என்ற செய்தி ஊரில் பரவியது. அவன் நண்பன் கேட்டான்: ''உன்னை ஏன் மேஸ்திரி கடுமையாகக் கோபித்துக் கொண்டார்?''

''மேஸ்திரியின் வேலையென்ன என்று உனக்குத் தெரியும். மற்றவர்கள் சரியாக வேலை செய்கிறார்களா என்று மேற்பார்வையிடுவதுதானே?''

''அதற்கும் நீ வேலை இழந்ததற்கும் என்ன சம்பந்தம்?''

''மேஸ்திரிக்கு என் மீது பொறாமை! எல்லோரும் என்னை மேஸ்திரி என்று நினைத்துவிட்டார்கள்!''

— பி. எஸ்.





மார்க்ஸ் சகோதரர்கள் ஹாலி வுட்டில் ஒரு காலத்தில் சக்கைப்போடு போட்டார்கள். சிரிப்பு நடிகர்கள். ஒரு சமயம் அவர்களில் ஒருவரான கிரோ மார்க்ஸ் ஒரு ஐந்து நட்சத்திர ஓட்டலுக்குள் ஒரு நாயுடன் நுழைந்தார். மேஜை முன்னால் அவர் எதிரே அதுவும் ஒரு நாற்காலியில் சமர்த்தாக அமர்ந்தது !

ஸர்வர் அவருக்கு மட்டும் பரிமாற ஆரம்பித்தான்.

''என்ன இது? நான் தனியாகவா வந்திருக் கேன்? என் அருமை நண்பனுடன் சாப்பிட வந் திருக்கேன்'' என்று கூச்சல் போட்டார் கிரோ.

அவரைப் பகைத்துக்கொள்ள விரும்பாத ஓட்டல் நிர்வாகம், நாய்க்கும் பரிமாற ஏற்பாடு செய்தது. அழகாக அது சாப்பிட்டுவிட்டு வாலாட்டியது.

இருவருக்குமாகச் சேர்த்துப் பில் தயாரித்து வந்து கிரோவிடம் தந்தார் ஸர்வர்.

''என்ன அநியாயம் இது? என் நண்பனல்லவோ என்னை இங்கே விருந்துக்கு அழைத்து வந்தது? அவரிடம் கொடு பில்லை'' என்றார் கிரோ!

---

உறுமியது. அவ்வளவுதான். அதிர்ச்சியில் கிளையிலிருந்த பழத்தையும், சுவற்றின் மேல் இருந்த தன் உடலையும் தோட்டத்தின் பக்கம் சரியவிட்டான். மறுகணம் அந்த மாமரக் கிளையைப் பிடித்துக் கொண்டு தொங்கினான் வெங்கட்.

வெங்கட் தொங்கிய கிளை 'மளுக்' என்று முறிந்து கீழே விழ, பலத்த உறுமலுடன் அந்த நாயும் அவன் மேல் பாய, விழுந்தவன் எழுந்து ஓட, அந்த நாயின் உறுமலைக் கேட்டு அதனு டைய சில தோழர்கள் குலைத்தபடி தோட்டத் தின் பல்வேறு மூலையிலிருந்து அவனை நோக் கிப் படையெடுத்தனர்.

வெங்கட் அந்த ரோஜாத் தோட்டத்தின் குறுக்கே புகுந்து பறந்தான். கைகளால் முகத்தை மட்டும் மறைத்தபடி அவன் முதுகை, மார்பை, கைகளை ரோஜா முட்கள் கீறினதை லட்சியம் செய்யாமல் ஓடினான். நாய்கள் ? அவை மட்டும் என்ன ? அவை களும் லட்சியம் செய்யாமல் குறுக்கே புகுந்து ரோஜாச் செடிகளைத் துவம்சம் செய்த படி அவனை நோக்கி முன்னேறின. பதினைந்தே நிமிடங்களில் அந்தத் தோட்டம் அதாஹுதம் ஆயிற்று.

வெளியே வந்த வெங்கட் தான் காலையில் ஓடிய பக்கமாகவே மறுபடியும் ஓடி வருவதை உணர்ந்தான். ஐயோ....! இதோ தேவி வீட்டுத் தோட்டம்.... இது என்ன விதி, இன்று இரண்டாம் முறையாக இங்கே துரத்து கிறது என்று புரியாமல் உள்ளே ஓடினான் அவன். ஹாலில் சோகமாய் உட்கார்ந் திருந்த மங்கை நல்லாள் தேவி, தன் காதலன் இப்படித் தலைவிரி கோலமாய், கிழிந்த ஷர்ட் டும், கசங்கிய பாண்ட்டும் அறுந்த செருப்பு மாய், ஓடி வருதல் கண்டு மனம் பதைத்தாள். உடல் விதிர்விதிர்த்தாள். நெக்குருகினாள். பவள வாய் திறந்து யாழை மீட்டினாள்.

''ஐயோ... வெங்கட்... என்ன...இது... என்ன ஆயிற்று உங்களுக்கு ?''

''தேவி.... தேவி.... சிம்ஸ்பார்க்–பக்கத் துப் பங்களா — பசி —''பழம் — காம்பவுண்டு— கிளை முறிதல் — நாய் துரத்தல் — செடிகள் முள் கிழித்தல்'' என்று தந்தி பாஷையில் முதலில் சப்ஜெக்ட்டைச் சொல்லிப் பின்பு மூச்சு சற்று நிதானத்துக்கு வந்தவுடன் தான் நாய்களுடன் போராடி மீண்ட வீரக் கதை யைச் சொல்லி முடித்தான் வெங்கட்.

தேவியின் முகம் மகிழ்ச்சியால் பளபளத் தது.....

'' நிஜமாகவா,, வெங்கட் ? அந்தப் பார்க் குக்குப் பக்கத்துப் பங்களா தோட்டத்திலா இவ்வளவும் நடந்தது ?''

''ஆமாம் !''

'' அப்பா ! அப்பா !'' என்று தேவி ஆனந்தபரவசத்துடன் கூவ, உடனே உள்ளே நுழைந்த நரசிம்மாச்சாரியைக் கண்ட வெங் கட் வெளியே பாய ஆரம்பிக்க அவனை அப் படியே சோபாவில் உட்காரும்படி அழுத்திய தேவி, ''அப்பா.... ரோஸ் பேலஸ் தோட்டம் குளோஸ்.... மேலே போய்ப் பாருங்களேன்.. ஒரு செடி விடாமல் மிதித்துத் துவம்சம் செய்துவிட்டு வந்திருக்கிறார் அப்பா இவர்!'' என்று வெங்கட்டின் வீரச் செயல்களை விவரித்தாள் தேவி. நரசிம்மன் குழந்தை யாய்ப் புன்னகை செய்து அவன் கையையும் பலமாய்க் குலுக்கிவிட்டுப் பைனாகுலரை எடுத் துக் கொண்டு மேலே போனார்.

''தேவி! என்ன ஆயிற்று திடீரென்று உன் அப்பாவுக்கு?'' என்று சின்னடைப் பிடித்துக் கொண்டான் வெங்கட்.

''ஒன்றும் ஆகவில்லை அவருக்கு. விஷயம் என்ன தெரியுமா? அடுத்த வாரம் குன்னூரில் —இந்த ஏரியாவில் இண்டியன் ஹார்ட்டிகல் சரல் அசோசியேஷன் நடத்தும் போட்டியில்— அருமையாகப் பேணி வளர்க்கப்பட்டிருக்கும் அழகான ரோஜாத் தோட்டத்துக்கு முதற் பரிசு. இப்பொழுது எங்கள் தோட்டத்துக்குத் தான் கிடைக்கும். இந்த ஏரியாவிலேயே எங் களை மிஞ்சக்கூடிய கோடிப் பங்களா, 'ரோஸ் பேலஸ்' ராகவாச்சாரியின் தோட்டம்தான். இப்போது அதிர்ஷ்டவசமாய் உங்கள் கால் வண்ணத்தால் அந்தத் தோட்டம் போட்டிக்கு வர முடியாது. முதற் பரிசு நிச்சயம் அப்பா வுக்குத்தான்'' என்றபடி அவனை மாடிக்கு அழைத்துச் சென்றாள் தேவி.

மேலே...

நரசிம்மாச்சாரி பைனாகுலர் வழியாகக் கோடிப் பங்களாத் தோட்டத்தைப் பார்த்து ஆனந்தப் பரவசப்பட்டுக் கொண்டிருந்தார்.

திருப்தியுடன் புன்னகை செய்தபடி ''ம்.... என்னப்பா வெங்கட்! எவ்வளவு லக்ஷம் உன் லட்சியம்?'' என்றார் நரசிம்மன்.

சொன்னான் வெங்கட்.

''ம்... அவ்வளவுதானா?''

''ம்.... லக்ஷங்கள் மட்டும் என் லட்சிய மில்லை. தேவை டெபாஸிட் மட்டுமல்ல. தேவியும்தான்!'' என்றான் வெங்கட் தைரிய மாய்.

''என்னம்மா, என்னமோ கேட்கிறாரே'' என்றார் நரசிம்மன் ஒன்றும் தெரியாதது போல.

''போங்க அப்பா!'' என்றபடி நாணிக் கண் புதைத்தாள் தேவி!



# ஒரு ரூபாய் மிச்சப்படுத்துங்கள்!







**சிந்தால்**
**சோப் வாங்கும்போது**
**சிந்தால் பவுடர் விலையில் ஒரு**
**ரூபாய் மிச்சப்படுத்துங்கள் ***

கூப்பன் அறிவிப்புடன் கூடிய சிந்தால் சோப் வாங்குங்கள். உறையின் பின் பக்கத்தில் ஒரு கூப்பன் இருக்கும். அதை உங்கள் டீலரிடம் கொடுத்து, ஒரு ரூபாய் தள்ளுபடியில் சிந்தால் டாய்லெட் பவுடர் (எந்த சைஸானாலும்) வாங்கிக் கொள்ளுங்கள்.







*ஸ்டாக்குகள் உள்ளவரையே இந்தச் சலுகை உண்டு

Interpub/GS/13/76 TM



# தீவுகள்

இந்திரா பார்த்தசாரதி

9

"உங்கள் அம்மாவைக் கண்டு நான் ஏன் பயப்பட வேண்டும்? என் முடிவுக்கும் உங்கள் அம்மாவுக்கும் சம்பந்தமே இல்லை. எங்கே போகப் போகிறோம் என்ன செய்யப் போகிறோம் என்பதெல்லாம் தீர்மானிக்காமல் திடுதிப்பென்று உங்களுடன் கிளம்பி வர எனக்கு விருப்பமில்லை. உணர்ச்சிவயப்பட்ட நிலையில் முடிவெடுப்பது சரியாக இருக்காது என்பது என் அபிப்பிராயம்'' என்றாள் விஜயா.'

ராகேஷ் கோபத்துடன் அவளைப் பார்த்தான்.

'' உனக்கு இந்த அற்பக் காரியதரிசி வேலையா அவ்வளவு முக்கியமாகப் போய் விட்டது ?'' என்று சீறினான்.

''எல்லோரும் மானேஜிங் டைரக்டராக ஆகி விட முடியாது, மிஸ்டர் ராகேஷ்....'' என்றான் மணி.

''ஐ அம் ஸாரி.... உங்களை அவமானப் படுத்த வேண்டும் என்பதற்காக நான் இதைச் சொல்லவில்லை....'' என்றான் ராகேஷ்.

''பாரம்பரியமாக வருகின்ற வெவ்வேறு தரத்துக்குச் சமூகப் பிரக்ஞை என்று மிஸ்டர் கபூர் கூறினாரே, அதன் அர்த்தம் இப்பொழுது தான் எனக்குப் புரிகிறது'' என்றாள் விஜயா.

''டாம் யு அண்ட் யுவர் அண்டெர்ஸ்டாண்டிங். நான் மோகினியின் பிள்ளை இல்லை என்று நிரூபித்துக் காட்ட வேண்டுமா ? ஐ ஹேட் ஹர்.... ஐ ஹேட் ஹர்'' என்று அவன் குரலைச் சற்று உயர்த்திச் சொன்னது, விஜயாவுக்குச் சிறிது அச்சத்தைத் தந்தது.

''எதற்காக இப்படி நடு ரோட்டில் நின்று கொண்டு கத்துகிறீர்கள்? மற்றவர்கள் ஏதாவது நினைத்துக் கொள்வதற்கா?'' என்று கேட்டுக் கொண்டே அவள் மணியைப் பார்த்தாள்.

மணி அங்கு இல்லை ! போய்விட்டான். விஜயாவுக்குத் 'திக்'கென்றது. ராகேஷின் சொற்கள் அவனைச் சுட்டிருக்க வேண்டும். 'இந்த அற்பக் காரியதரிசி வேலை....!' — அவனும் சரியாகப் பதிலுக்குச் சொல்லிவிட்டுத்தான் போனான்.... இவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா ? இவனுடன் எங்கே போவது ? — 'வீடு, வீடு' என்று நினைத்துக் கொண்டு தான் இந்த வயதில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்கின்றோமே, அப்பா அவ்வாறு கட்டுப்படுத்திக் கொண்டாரா ? இந்த உலகில் யார் தான் யாருக்கு முக்கியம்?— இப்படி ஒருவன் தன் மீது உயிரை வைத்துக் கொண்டு கூப்பிடும்போது, அவன் அழைப்பை நிராகரிப்பது விவேகந்தானா ? — ராகேஷ் கூறுவது போல், எதற்காக 'இந்த அசட்டுத்தனமான தியாக உணர்ச்சி?' 'தியாக உணர்ச்சி' என்றும் சொல்ல முடியாது. ராகேஷ், 'வெறும் ராகேஷாக' இப்பொழுது தன்னுடன் வந்தாலும், என்றுமா, கபூரின் பிள்ளை என்பதை மறந்துவிடப் போகிறார்கள்? இதைப் பற்றி நினைப்பது சுயநலந்தான். சம்பாதித்துத்தான் பிழைக்க வேண்டும் என்று நிர்ப்பந்தம் இருக்கும்போது, சுயநலமாயிருப்பதுதான் நாணயம்.

'' என்ன பேசாமல் நிற்கிறாய்? நான் இன்னும் கத்த வேண்டாம் என்றால், என்னுடன் வந்துவிடு'' என்றான் ராகேஷ்.

'' எங்கே போவது? இடத்தைப்பற்றித் தீர்மானிக்காமல், 'வா, வா' என்றால் என்ன அர்த்தம் ?''

---

குருஷேவ் துணியை ரஷ்யாவில் ஒரு தையற்காரனிடம் கொடுத்துத் தமக்குக் கோட் தைத்துத் தருமாறு கோரினார். துணி போதாது என்று கூறிக் கைவிரித்தார் டெய்லர். அதே துணியை குருஷேவ், தாம் யூகோஸ்லேவியா போயிருந்தபோது அங்கே ஒரு டெய்லரிடம் கொடுக்க அவன் தாராளமாகத் தைத்துத் தந்தான். ரஷ்யாவில் மட்டும் ஏன் அதில் தைக்க முடியவில்லை என்று கேட்டபோது குருஷேவ் சொன்னார்: ''நான் இங்கே இருப்பதை விட ரஷ்யாவில் 'பெரிய' மனிதன் அல்லவா, அதனால்தான்!'' —முரளி






''முதலில் என் வீட்டுக்கு.''

''உங்கள் வீட்டுக்கா ?'' என்று அதிர்ச்சியுடன் கேட்டாள் விஜயா.

''ஆமாம்.... உன் உடைமைகள் அங்கு இருக்கின்றன. நானும் எனக்குச் சொந்தமானவற்றை எடுத்துக் கொள்கிறேன்....'' என்று அவன் கூறி முடிப்பதற்குள் அவள் சொன்னாள் : ''இது நடவாத காரியம்.''

'' ஏன்?''

''என்னால் உங்கள் வீட்டுக்கு வர முடியாது. என்னைக் கோழை என்று வேண்டுமானால் நினைத்துக் கொள்ளுங்கள்....உங்கள் அம்மாவை நான் மறுபடியும் பார்க்கத் தயாராக இல்லை......''

'' அப்படியானால் நீ என்னதான் செய்யப் போகிறாய் ?''

'' நான் என் வீட்டுக்குப் போகிறேன்.... என்னை வீட்டில் வந்து பாருங்கள்.... ''

'' உன் வீட்டில் ஆட்சேபணை இருக்காதா ?''

''இதைப் பற்றி வேறுவிதமான அபிப்பிராயம் இருக்கக் கூடிய அளவுக்கு எங்கள் குடும்பத்துக்கு வசதி இல்லை.''

'' இதைப் பற்றித் தேர்ந்தெடுப்பதற்கான உரிமையைப் பண வசதி உனக்குத் தராத காரணத்தினால்தான், என்னை நீ விரும்புவதாகச் சொல்கிறாயா ? — அப்படி நான் உன்னைக் கட்டாயப்படுத்த விரும்பவில்லை.....'' என்றான் ராகேஷ்.

'' 'நான் உங்களைக் காதலிக்கிறேன்' என்று நடு வீதியில் கத்த வேண்டும் என்கிறீர்களா?''

ராகேஷ் சிரித்தான். ''நீ இப்படிப் பேசுவது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது '' என்றான் நிதானமாக.

இருவரும் 'ரீகல்' டாக்ஸி ஸ்டாண்ட் அருகே வந்தார்கள்.

''நான் ஆபீசுக்குப் போய்...'' என்று ஆரம்பித்தாள் விஜயா.

''எந்த ஆபீஸ் ?'' என்று இடைமறித்தான் ராகேஷ்.

''மிஸ்டர் கபூர் அண்ட் அஸோஸியேட்ஸ்.''

''டாமிட்.... நீ அங்கு போகக்கூடாது.''

''வாட் டு யு மீன் ?''

'' நீ அங்கு வேலை செய்வதை நான் விரும்பவில்லை.... அப்பா ஏதாவது சொல்லி உன் மனத்தை மாற்ற முயலுவார்....அடிக்கடி அசட்டுத்தனமான தியாக உணர்ச்சியினால் 'தாக்கப்படும்' உனக்கு....''

'' அப்பொழுது என் பிழைப்புக்கு வழி சொல்லுங்கள்.''

'' நான் ஒரு 'டெலிவிஷன் ஸர்வீஸிங்' கடை ஆரம்பிக்க இருக்கிறேன். நீதான் என் அந்தரங்கக் காரியதரிசி கம் ரிஸப்ஷனிஸ்ட் கம் மானேஜர் கம் எவரிதிங்.....''

''சம்பளம்?''

''ராகேஷ்.''

''கடையில் வாங்கும் வீட்டுச் சாமான்களுக்கு உங்கள் கை, கால்களைப் பிச்சுப் பிச்சுக் கொடுக்க முடியாது.''

ராகேஷ் சிரித்துக் கொண்டே சொன்னான்: ''ராகேஷின் இன்ஜினீயரிங் மேதைத் தனத்தை உணர்ந்து அவனுடைய கைகளை இன்ஷூர் செய்யப் போகிற காலம் வராமல் போகாது.''

''மேதைத்தனம் கையைப் பொறுத்த விஷயம் என்று எனக்குத் தெரியாது.''

அவன் அவள் கையைப் பற்றி இலேசாக அழுத்தினான். ''யு ஆர் நாட்டி.''

அவனுடைய ஸ்பரிசம் அவளுக்கு இதமாக இருந்தது. தொடர்ந்து கையைப் பிடித்துக் கொண்டிருப்பான் என்று அவள் எதிர்பார்த்தாள். ஆனால் அதிக சுதந்திரம் எடுத்துக் கொண்டுவிட்டோமோ என்று அஞ்சியது போல், அவன் தன் கையை மெதுவாக விலக்கிக்கொண்டான்.

''டாக்ஸியில் நான் உன்னை உன் வீட்டில் விட்ட பிறகு என் வீட்டுக்குப் போகிறேன்.... வீட்டை விட்டு வெளியேறுவதாக இருந்தாலும், சொல்லிக் கொண்டு வருவதுதான் எனக்கு ஆண்மையாகப் படுகிறது. என்ன சொல்லுகிறாய்?'' என்றான் ராகேஷ்.

விஜயா அவனுக்குப் பதில் சொல்லவில்லை. 'ரீகலு'க்குப் பக்கத்திலிருந்த ஒரு ஹோட்டலி

---

ஓட்டல் பணியாள்: சார், சார்! பதினெட்டாம் நம்பர் ரூமிலே நாலு திருடங்க...

மானேஜர்: ஆளுக்குப் பத்து ரூபாய் சார்ஜ் பண்ணிடு !



குடும்பத் தலைவி (விருந்தாளியிடம்) : உங்களுக்குக் காப்பி கொண்டு வரட்டுமா, டீ கொண்டு வரட்டுமா ? இல்லே ஒரு டாக்ஸி கொண்டு வரட்டுமா?

- உஷா விசுவநாதன்



லிருந்து வந்து கொண்டிருந்த ஒரு பெண் மணியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன பார்க்கிறாய்?"

"ஸ்வர்ணா...."

"யார்?" என்று கேட்டுக் கொண்டே அவன் திரும்பிப் பார்த்தான்.

ஸ்வர்ணா, ஓர் இளைஞனுடன் அவர்களை நோக்கி வந்தாள்.

"எங்கள் வீட்டிலிருந்து கிடைத்த விடுதலையைக் கொண்டாடுகிறாயா?" என்று கேட்டாள் ஸ்வர்ணா விஜயாவிடம்.

"நீ எதைக் கொண்டாடுகிறாய்?" என்று கேட்டான் ராகேஷ்.

"எனக்கு எப்பொழுதோ கிடைத்துவிட்ட விடுதலையை...." என்றாள் ஸ்வர்ணா.

விஜயா அந்த இளைஞனைப் பார்த்துக்கொண்டிருந்தாள். மயிர் பிடரியில் சிலிர்த்து நின்றது. ஆங்கில எழுத்து 'எல்' வடிவில் அடர்த்தியான கிருதா. தொங்கும் மீசை. சதுரம் சதுரமாகக் கட்டம் போட்ட வானவில் வண்ணத்தில் ஜெர்கின்ஸ். முகத்தில் இந்த மயிர் அலங்கோலங்களெல்லாம் இல்லாமல் இருந்தால் அவன் அழகாக இருப்பான் என்று விஜயாவுக்குத் தோன்றியது.

"என் பெயர் விஜய்..." என்று சொல்லிக் கொண்டே அவன் விஜயாவிடம் கைகளை நீட்டினான்.

"ஓ! அறிமுகம் செய்ய மறந்துவிட்டேனே? விஜயா.... இவன் என் தம்பி ராகேஷ்" என்றாள் ஸ்வர்ணா.

"உங்களை எங்கோ பார்த்திருக்கிறேன்" என்றான் விஜய் விஜயாவிடம்.

"அழகான பெண்களைப் பார்த்தால் இது தான் இவனுடைய பூர்வ பீடிகை" என்றாள் ஸ்வர்ணா சிரித்துக் கொண்டே...

"டோன்ட் பி ஸில்லி. நிச்சயமாக நான் உங்களை எங்கோ பார்த்திருக்கிறேன்...."

"இவன் இப்படித்தான் சொல்லிக் கொண்டிருப்பான்..... அது கிடக்கட்டும். நீ எனக்குக் கொடுத்த வாக்குறுதியை மறந்து விட்டாய்....." என்றாள் ஸ்வர்ணா விஜயாவிடம்.

"என்ன?"

"ரூபிக்குத் தாயாக இருப்பதாகச் சொன்னாய்....."

"நானாக உங்கள் வீட்டைவிட்டு வெளியேற வில்லை."

"நான் ரூபியை உன் வீட்டில் கொண்டு விட்டு விடுகிறேன். பார்த்துக் கொள்கிறாயா?"

"அது அவ்வளவு சுலபமாக நடக்கக்கூடிய காரியம் அல்ல" என்றாள் விஜயா.

"என் குழந்தையை நான் எங்கு வேண்டுமானாலும் கொண்டுவிட எனக்கு உரிமை இருக்கிறது. யார் என்ன சொல்ல?"

"வைத்துக் கொள்வாள். என்ன சம்பளம் தருவாய்?" என்று கேட்டான் ராகேஷ்.

விஜயா ராகேஷை ஆச்சரியத்துடன் பார்த்தாள்.

"நீ விஜயாவின் பிஸினெஸ் மானேஜரா?" என்றாள் ஸ்வர்ணா.

"ஆமாம்.... நானும் இவளும் சேர்ந்து இருப்பதென்று முடிவு செய்துவிட்டோம்.

ஓர் அறிவாளி: "பாலே நடனத்தில்தான் உலகின் மிக அரிய படைப்பாகிய பெண் சோபிக்க முடிகிறது!" என்றார். இதன் ரகசியத்தைக் கேட்டபோது அவர் கூறிய விளக்கம்: "பெண் தன் உடலழகு முழுவதையுமே காட்டும் வாய்ப்பு 'பாலே'யில் உள்ளது; ஆனால் அதே சமயம் அவள் வாய் திறந்து பேச வாய்ப்பேயில்லை!"
— பி. எஸ். எம்.

"இவ்வளவு பேரிட்டே கடன் வாங்கி இருக்கியே, ராத்திரி உனக்கு எப்படியப்பா தூக்கம் வருது?"
"நான்தான் பகல்லே தூங்கிடறேனே!" - உஷா



## வெற்றியின் ரகசியம்

''என் வெற்றிக்கு என் மனைவிதான் காரணம்''

''எப்படி?''

''அவளுடைய போட்டோவை என் ஆபீஸ் மேஜை மீது வைத்திருக்கிறேன். அதை ஒவ்வொரு தடவை பார்க்கும்போதும் வீட்டுக்குப் போகக் கூடாது என்ற எண்ணம் வரும். அப்படியே நிறைய வேலை செய்து முடித்துவிடுவேன்.''

சண்டே வீக்லி - மணி





நானும் வீட்டை விட்டு வெளியேறப் போகிறேன். என்னால் அங்கு இருக்க முடியாது. அது நரகம்'' என்றான் ராகேஷ்.

ஸ்வர்ணா அவன் கைகளைப் பற்றிக் குலுக்கினாள். ''நீதான் அந்த வீட்டின் முதல் ஆண் பிள்ளை. ரூபியை உங்களிடம் விட்ட பிறகு நான் நிம்மதியாக இருக்கலாம்.''

''இப்பொழுது ரூபியினால் உன் நிம்மதி எந்த விதத்திலும் பாதிக்கப்பட்டதாகத் தெரியவில்லையே?'' என்று கேட்டுக் கொண்டே விஜயைப் பார்த்தான் ராகேஷ்.

''இது உனக்கு நிம்மதியாகப் படுகிறதா?'' என்று கேட்டுவிட்டுப் பெரிதாகச் சிரித்தாள் ஸ்வர்ணா.

''ஐ ஆம் ஸாரி... ஐ மீன்...'' என்று மேலே ஒன்றும் சொல்ல முடியாமல் தயங்கினான் ராகேஷ்.

''உன் அம்மா என் வாழ்க்கையைப் பாழாக்காவிட்டால், நான் இந்த 'மொரா ஜே'டு சுற்றுவேன் என்று எதிர்பார்க்கிறாயா? இப்பொழுது நான் அவளுக்குச் சொல்லக் கூடியவை நிறைய இருக்கின்றன...ராகேஷ், நீ வீட்டை விட்டு வெளியேறி இவளுடன் இருக்கப் போகிறேன் என்கிறாயே, இதனால் அம்மாவுக்கு மாரடைப்பு வரலாம்...ஆனால் அவ்வளவு சுலபமாகச் சாகவேண்டிய ஜென்மமா அது? —'' என்று பேசிக்கொண்டே போனாள் ஸ்வர்ணா.

''நீ என்னை 'மொரான்' என்று சொன்னதை நான் ஆட்சேபிக்கிறேன்'' என்றான் விஜய்.

தெருவில் போகிறவர்களில் சிலர் ஸ்வர்ணா குரல் எழுப்பிப் பேசுவதைப் பார்த்துக் கொண்டே போனார்கள். விஜயாவுக்கு இது என்னவோ போலிருந்தது.

''சரி... நாம் போகலாமா?'' என்றாள் அவள் ராகேஷிடம்.

''நீங்கள் வீடு பார்த்துக் கொண்டு தனியாயிருந்தால் நான் உங்கள் வீட்டுக்கு வரலாமா?'' என்று கேட்டாள் ஸ்வர்ணா.

''நாட் வித் பெட்ஸ்'' என்றான் ராகேஷ்.

ஸ்வர்ணா இன்னும் பெரிதாகச் சிரித்தாள். ''ஓ...இவளை என்னுடைய 'பெட்' என்கிறாயா? — யு ஆர் ரைட்...''

''சரி வரட்டுமா?'' என்று கேட்டாள் விஜயா. அவளுக்கு ஸ்வர்ணா சிரிக்கச் சிரிக்கப் பயமாக இருந்தது.

''ரூபியைக் கொண்டு விடலாமா?''

''எனக்கு ஆட்சேபணை இல்லை...''

''வெயிட் எ மினிட்'' என்று சொல்லிக் கொண்டே அவள் சற்றுப் பின்னால் சென்று மறுபடியும் அந்த ஹோட்டலுக்குள் நுழைந்தாள். அவள் எதற்காகக் காத்திருக்கச் சொன்னாள் என்று விஜயாவுக்குப் புரியவில்லை.

சிறிது நேரத்துக்குப் பிறகு அவள் கையில் ஒரு பெரிய பொட்டலத்துடன் வந்தாள். அதை ராகேஷின் கையில் கொடுத்தாள்.

'' என்ன இது?'' என்று கேட்டான் ராகேஷ்.

''ஸ்காட்ச்... நீயும் உன் விடுதலையைக் கொண்டாடு.''

''ஆர் யு கிரேஸி?'' என்றான் ராகேஷ்.

''எஸ்... ஐ ஆம்... உன் அருமை அக்காவின் பரிசுக்கு நன்றிகூடவா உனக்குச் சொல்லத் தெரியவில்லை? வீட்டுக்குப் போய் நான் சொல்லிக் கொள்கிறேன். காதற் பறவைகள் நீங்கள் இருவரும் சுதந்திரமாகச் சிறகடித்து எங்கு வேண்டுமானாலும் பறந்து போகலாம். உலகம் உங்களுடையது'' என்றாள் ஸ்வர்ணா. அவள் குடிக்காத நேரமே கிடையாதோ என்று விஜயாவுக்குத் தோன்றிற்று.

''நான் வீட்டுக்குப் போய்ச் சொல்லி விட்டுத்தான் வெளியேறப் போகிறேன். சொல்லாமல் ஓடுவதற்கு நான் பயந்தாங் கொள்ளி அல்ல'' என்றான் ராகேஷ்.

''முட்டாளே.... போய்ச் சொன்னால் உன்னை அறைக்குள் வைத்துப் பூட்டி விடுவார்கள். எனக்கு அப்படித்தான் நேர்ந்தது. வேறு வழியில்லாமல் என் காலஞ்சென்ற கணவரை (அவர் ஆத்மா சாந்தியடைக) மணந்தேன்... முடிவு?.... திஸ் மொரான் அன்ட் மெனிமோர் லைக் ஹிம்....'' என்று சொல்லிக் கொண்டே மறுபடியும் சிரிக்க ஆரம்பித்தாள் ஸ்வர்ணா.

''என்னுடன் வா... உன்னை வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன். யு ஆர் நாட் ஆல் ரைட்'' என்றான் ராகேஷ்.

''ஹூ இஸ் நாட் ஆல்ரைட்? வீட்டுக்குப் போய் அம்மாவிடம் சொல்லிக்கொண்டு ஓடப்போகிறேன் என்கிறாயே, நீயா? நானா? நான் சரியாகத்தான் இருக்கிறேன்.... கன்னாட்பிளேஸை இன்னொரு சுற்றுச் சுற்றி விட்டு தி செல்லார் போகப் போகிறோம், வருகிறாயா? வொய்ன் ஹவுஸ் இன் தி விண்டர் மூன்.... ஹஹ்ஹா ஹா....''

இவ்வாறு சிரித்துக் கொண்டே அவள் விஜயை இழுத்துக் கொண்டு போய்விட்டாள்.

விஜயாவும் ராகேஷும் சிறிது நேரம் வரை பேசவில்லை. ஸ்வர்ணா போவதையே பார்த்துக் கொண்டு நின்றனர்.

ராகேஷ் தோள்களைக் குலுக்கிக்கொண்டான். ''சரி, நாம் போகலாமா?''

விஜயா தலையசைத்தாள்.

(தொடரும்)



ரயில்வே போர்டு, டிராபிக் கமர்ஷியல் டைரக்டர் ஸ்ரீ V. K. ஸ்தாணுநாதன் அவர்கள் புதல்வி சௌபாக்கியவதி **சுதா பார்வதிக்கும்**

பெங்களூர் பிரமுகர் A. A. கிருஷ்ணன் அவர்கள் புதல்வன் சிரஞ்சீவி **குமார் சுவர்ணானந்தா**வுக்கும் சமீபத்தில் கல்கத்தா ரயில்வே ஆபீஸர்ஸ் கிளப்பில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்

## அவலம்!

கண்ணீர் மட்டும்
உப்பாக
இல்லையென்றால்
தமிழ் நாட்டின்
தண்ணீர்ப் பஞ்சம்
என்றோ
தீர்ந்திருக்கும்!

— சாரதி



# புதுக் கவிதை



## ஏழை பங்காளன்!

'ஏழைபங் காளன்!'
என்றே ஒருவனைச்
சூழ இருந்தோர்
சொன்னார். அதனால்

நன்றே எனமுன்
நாடினேன், அவனை.
அன்றே உரைத்தான்
அவன் இது போலே!

'' ஏழையின் பாலும்
எனக்கொரு பங்கை
வாழுமா றெண்ணி
வாங்கிக் கொள்வதால்

நானுமிப் பேரை
நயமுறப் பெற்றேன்.
தானுமாய் நீயும்
தருக, உன் பங்கே!''

— தமிழ்மகன்



## சிலை எடுப்போம்!

வடமேற்குப் பருவக் காற்றே!
வடவரின் சூழ்ச்சியாலே
வாராது போய்விட்டாயோ?
நாங்கள் யார் தெரியுமா?
வரலாறு படைத்தவர்கள்!
வடமலையாம் இமயத்தின் கல்லை
வடவாறும் கங்கையில் நீராட்டி
வடவராம் கனகவிசயர் தலையிலேற்றி
இங்கே கொணர்ந்து சிலையெடுத்தவர்கள்!
அன்று சிலையெடுத்து வரலாறு படைத்தான்
சேரன் செங்குட்டுவன்!
நாங்கள் அவன் வழித் தோன்றல்கள்!
இன்று சிலையெடுத்தே வரலாறு
படைப்பவர்கள்.
வடவர் சூழ்ச்சியில் மயங்கி மறையாதே!
சும்மா விடமாட்டோம்!

தென்மேற்குப் பருவக் காற்றே!
உனக்கும் எச்சரிக்கை!
கலைஞரின் கவிதையை நீ
(தினத்தந்தியில்)
பார்க்கவில்லையா?
பார்த்தும் வரவில்லையா?
அண்ணன் பெயரால் அழைக்கின்றேன்
மரியாதையாக வந்துவிடு,
இல்லாவிட்டால் —
நிதி திரட்டி
உனக்கும் ஒரு சிலையெடுத்துச்
சந்தியில் நிறுத்துவோம்!
வா
உடனே
வா!

— கா. அப்துல்லா

## மே-கம்மா!

மேகம் சூழ்ந்துகொண்டு
மே - ஜூனில் மழையில்லை!
''மே - கம்'' என்ற நிலை
மேலும் தொடர்ந்திடுமோ?

— கலாபாரதி





## அழகு !

காதளவு ஓடிய கண்கள் அவளுக்கென்று
காதலித்தபோது கூறி மகிழ்ந்தான்
காதுவரை கிழியும் வாயும் உண்டென்று
கல்யாணத்துக்குப் பின்பு கண்டறிந்தான் !

— விஜய சாரதி

## Blow Hot, Blow Cold:

ஒரு பெண் என்பவள் யார்?
அனுபவஸ்தன் விடையளித்தான்:
''தொலைவில் ஏர்கண்டிஷனர்;
அருகில் ஹீட்டர்!''

— ஸ்ரீதர் சாமா

## ஜனநாயக சோஷலிஸம் !

அமெரிக்காவுக்குக்
காவடி தூக்கினால் - அது
ஜனநாயகம்!
இரஷ்யாவுக்குக்
காவடி தூக்கினால் - அது
சோஷலிஸம்!
இரண்டுக்குமே
காவடி தூக்கினால்.....
அதுதானய்யா,
''ஜனநாயக—
சோஷலிஸம்!''

— கே. ஆர். கிருஷ்ணு



## பத்தாம் பசலிக்குப் புரியாது !

வெள்ளைக் காகிதத்தில்
வண்ணத்தால் அங்குமிங்கும்
கோடுகள் பல இழுத்து
' ஓவியம் இது ' என்றேன் !
ஏற்க மறுத்து விட்டேன் !
'' 'மாடர்ன் ஆர்ட்'டெல்லாம்
பத்தாம்பசலிக்குப் புரியாது.
விட்டுவிடு'' என்று சொல்லி
மண்டையிலே தட்டிவிட்டான்.

கால்கையை உதைத்துக் கொண்டு
இடுப்பொடிய ஆடிக்
குதித்து நின்றேன்.
'நாட்டியம் இது' என்றேன்.
ஏற்க மறுத்து விட்டேன்.
'' 'காபரே' ஆட்டமெல்லாம்
பத்தாம் பசலிக்குப் புரியாது
விட்டுவிடு'' என்று சொல்லி
மண்டையிலே தட்டிவிட்டான்.

எதுகை மோனையின்றி
சீர் தளை ஏதுமின்றி
எண்ணத்தில் தோன்றியதை
இங்கே நான் வடித்து விட்டேன்.
'கவிதை இது' என்பேன்.
ஏற்க மறுக்காதீர். மறுத்திடிலோ,
'' 'புதுக் கவிதை' யெல்லாம்
பத்தாம் பசலிகளுக்குப்
புரியாது. விடுங்கள்'' என்று
உங்களையே சாடிடுவேன்.

—ஆர். அனந்தராமகிருஷ்ணன்

## தேசாபிமானிகள் !

வெள்ளையன் சுரண்டி
வெளிநாட்டுக்குக்
கொண்டு போனான்.
அந்தக் கொள்ளையனைப் போல்
நாங்கள்
தேசத்தைச் சுரண்டி
வெளி நாட்டிலா குவிக்கிறோம்?
சொந்த தேசத்தில்தானே
முடிந்தமட்டும்
குவித்துக் கொள்கிறோம்?

— பவானி மைந்தன்



# மலரும் பூவெனப் பிள்ளை வளர்ந்திடப் பலமான துணை—

# இன்க்ரிமின்* டானிக்

இளமைப் பருவம்—பூவாய் மலரும் நாட்கள்—மலர்ந்து சிரித்து உங்கள் மனத்தை அள்ளி வளரும் பருவம்...இப் பருவத்தில் அவளுக்குக் கட்டாயம் தேவை—இன்க்ரிமின். பின்னர் பாருங்களேன் அவள் வளர்ச்சியை! பசித்துப புசிப்பாள்... உண்ணும் உணவெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக மாறும். நலம் தரும் வைட்டமின்கள், இரும்புச் சத்து, இவற்றோடு உங்கள் மகளின் வளர்ச்சிக்கு மிகமிக அத்தியாவசியமான அமினோ அமிலம், லைஸின் யாவும் நிறைந்தது இன்க்ரிமின்.




# இன்க்ரிமின்* டானிக்

**உணவையெல்லாம் ஓங்கிய வளர்ச்சியாக்கும்**
**உங்கள் பிள்ளை பூவாய் மலர்ந்து சிரிக்கும்!**

டாக்டர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர்—
Lederle ஸயனமிட் இந்தியா லிமிடெடின் ஒரு பிரிவு
*அமெரிக்கன் ஸயனமிட் கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

175 ml.

Incremin syrup

VITAMINS B1, B6, B12
LYSINE
WITH IRON

TONIC APPETITE
STIMULANT

டிராப்ஸ் : 2 மாதங்கள் முதல்
2 வயது வரையில்
ஸிரப் : 14 வயது வரையில்

Sista's INC-363 C/75 Tam

# கட்சி மாறும் பட்சி

கதை: **குட்டி கிருஷ்ணன்**

படம்: ராஜு

9

பட்சியைத் திருத்த ஒரு வழியை யோசித்த கீதா, திட்டத்தை அமல் படுத்தினள். பக்கத்து வீட்டுப் பாக்கியம் வந்த போது...



















உங்களுக்கு உதவுறேன். மாற்றல் உத்தரவு வாபஸாகச் செய்யுறேன். ஆனால் அதுக்குக் கொஞ்சம் செலவாகுமே...?
செலவா?


ஆமாம், பட்சியே ஆர்டர்லே கையெழுத்துப் போட முடியுமா? பார்க்க வேண்டியவங்களைப் பார்த்து, கொடுக்க வேண்டியதைக் கொடுத்தால் தானே காரியம் நடக்கும்? ரெண்டு நீலம், ரெண்டு சிவப்பு, ரெண்டு பச்சை கொண்டாங்க!
ஆ! இருநூற்றைம்பது ரூபாயா!


தானும் லஞ்சம் வாங்க ஆரம்பித்து விட்டதாகப் பட்சி உணர்ந்தால், 'கீதாவையும் இந்த நிலைக்குத் தாழ்த்தி விட்டோம்!' என் வருந்தி மனம் திருந்துவான் பட்சி என எண்ணினாள் பேதை.


இருநூற்றைம்பது ரூபாய் பட்டுப் புடவை சரசரக்கப் பிரமாதமாய் அலங்கரித்துக் கொண்டு பட்சி முன் போய் நின்றாள் கீதா.
யாரு நீங்க? என்ன வேணும்?
ஸில்லி ஜோக்!


ஏது கீதா பட்டுப் புடவை? உன் முதலாளி டபுள் போனஸ் தருவதோ, உன் அப்பா தாராள மனம் பெறுவதோ கலியுகத்தில் நடக்காத காரியமாச்சே!
உங்க அடிச்சுவட்டைப் பின்பற்றி நடந்துக்கிட்டேன்!


ஸம்திங் வாங்கினியா? ஆகா! எப்பேர்ப்பட்ட அதிர்ஷ்டசாலி நான்! என் வருங்கால மனைவியும் என்னைப் போல் லஞ்சம் வாங்கினால் லட்சாதிபதியாகும் பத்தாண்டுத் திட்டத்தை ஐந்தாண்டில் நிறைவேற்றலாமே!
போச்சு! போச்சு என் சூழ்ச்சி பலிக்கலியே? இதென்ன வேதனை!

கோபுரம்




"இருள்போக்கி அருளேந்தியின் வீடு எது?''

''அருள்போக்கி இருளேந்தியா? இருள் போக்கி அருளேந்தியா ? யாரைக் கேட் கிறீர்கள் ?''

''அது என்ன எழவோ இப்படிப் போட்டுக் குழப்பாதீங்க. பகுத்தறிவுப் பாசறைக் கல் லூரி முதல்வராகப் பணியாற்றுகிறாரே, அந்த இருளேந்தியைத்தான் கேட்கிறேன்!''

''ஏதாவது அட்மிஷன் விஷயமோ?''

''ஆமாங்க!''

வீட்டின் அடையாளம் சொன்னவர், ''அவ ரைப் பற்றி உங்களுக்குத் தெரியும்னு நினைக் கிறேன். நிச்சயம் ஏதாவது எதிர்பார்ப்பார்'' என்று எச்சரித்தும் வைத்தார்.

"யார் அது?'' கடு குரலில் கேட்டார் அருளேந்தி.

''காந்தூர் மிராசுதார் கண்ணப்பனுங்க!''

''என்ன வேணும் ?''

''உங்கள் கல்லூரியிலே என் மகனுக்கு ஒரு ஸீட் வேணுங்க, பி.காமிலே. கல்லூரித் தலைவரைப் பார்த்தேன். அவர் உங்களைப் பார்க்கச் சொன்னாருங்க!''

'' இல்லேன்னு சொல்றதுக்கு இப்படிக் கையைக் காட்டிவிட்டாரா ?''

''இல்லேங்க!''

''பின்னே ?''

''தமது கல்லூரியிலே அவர் முதல்வருக்கும் அந்தந்தத் துறை ஆசிரியர்களுக்கும் தனி யாட்சியோடு தன்னாட்சியும் வழங்கியிருக்கா ராம்.''

''அப்படிச் சொல்லிக் கழண்டுகிட்டாராக் கும். அது போகட்டும். உங்களுக்குக் காந் தூரிலே எத்தனை நிலம் இருக்கும்?''

''ஊர்ப் பெரிய மிராசு நான்தானுங்க!''

''பேஷ், பேஷ்! பழம் நழுவிப் பாலில் விழுந்தது. பிறந்து பல் முளைக்கிறதற்கு முன்னாலிருந்தே எனக்குக் காந்தூர் ரைஸ் தான் நிரம்பப் பிடிக்கும். என்ன சொல் லுங்க, அந்த அரிசிக்கு ஈடு கிடையாதுங்க ! ஆனால் கொஞ்ச நாட்களாகக் கிடைக்கமாட் டேங்குது. எனக்கு வருஷாந்தரத்துக்கு ஏழெட்டு மூட்டையிருந்தா சமாளிச்சுடுவேன். ஒரேமுட்டா வாங்கிப் போட்டுட்டால் அப் புறம் முட்டு இல்லே பாருங்கள்! உங்களாலே அனுப்பி வைக்க முடியுமோ ? என்ன பணமோ, அதைக் கொடுத்துடறேன்!''

'' நீங்க ஒண்ணு! உங்களுக்குப் பத்து மூட்டை கொடுக்கிறதனாலே நான் குறைஞ்சு போயிடமாட்டேன். அரி காய்ச்சல் போட்ட தாக முதல் ரகமாகப் பார்த்துப் பத்து நாட்களிலே அனுப்பி வைச்சுடறேனுங்க! நம்ம பையன் அட்மிஷன் விஷயம்....''

''பார்க்கலாம். இனிமேதானே கல் லூரியே திறக்கப் போகிறது !''

கண்ணப்பன் குறிப்பைப் புரிந்துகொண்டு செயற்பட்டதன் பலன், மகன் கல்லூரிக்குப் போய்வர 'பெல்பாட்டம்' ஒன்றும் 'டைட்' ஒன்றும் தைக்க அளவு கொடுக்கும்படி ஆயிற்று!

"சாந்தம், சாந்தம்! கோபம் பாபம் ! உங்க பையன் வாங்கியிருக்கிற மார்க்கு எந்தப் பையனும் வாங்கவில்லே, ஒப்புக் கொள்கி றேன். அவன் கணக்கிலே மட்டும் 'சென்டம்' வாங்கவில்லே ; ஆங்கிலம் தமிழிலேகூட அதை எட்டிப் பிடித்திருக்கிறான். பிரிலியன்ட் பாய் ! சந்தேகமில்லே. எந்தப் படிப்புப் படித் தாலும் இவன் 'ஷைன்' பண்ணுவான். ஆனால் பி.காம்தான் வேணும்னு பிடிவாதம் பிடிக் கிறீங்க. நான் என்ன பண்ணட்டும் ?'' என்று கல்லூரி முதல்வர் கையை விரித்தார்.

''நீங்க அப்படிச் சொல்லப்படாது. ஒரு காலத்தில் மெடிகல், இன்ஜினீரிங்குக்குத்தான் மவுசு. இப்போ பி.காமுக்கு மோதுகிறார்கள். எதற்காக ? பின்னால் வேலைக்குச் சௌகரியம். பாங்கு உத்தியோகம் கிடைக்கலாம் என்கிற ஆசை. வி. ஏ. பண்ணினால் தொழில் நடத்த வும் வாய்ப்பிருக்கு.''

''எத்தனுவது வருஷத்தில் அவன் வி.ஏ. ஆவான் ?''

''ஏழாவது வருஷத்தில் !''

''நீங்கள் உங்கள் பையன் கெட்டிக்காரன் என்கிற நம்பிக்கையிலே அப்படிக் கணக்குப் போடறீங்க! கெட்டிக்காரப் பயங்கதான் அந்தப் பரீட்சையில் கஜினி முகம்மதையே புறமுதுகிட்டு ஓடச் செய்யறாங்க. பரீட்சை எழுதி முடித்து வேலைக்குப் போறதுக்குள்ளே அவன் தலை வழுக்கை விழுந்துவிடும். பேசாம உங்கள் பையனை 'ஆர்ட்டி'லே சேர்த்து இலக்கியம் படிக்க வையுங்கள். ஆங்கிலத்தைக் காட்டிலும் தமிழே மேல் என்பேன். ஏன், தெரியுமா ? மண்ணின் மைந்தர்களுக்கே வேலை என்ற நிலை வந்து விட்டால், அப்புறம் வெளி மாநிலத்துக்குப் போக முடியாது, பாருங்கள்! அதிர்ஷ்டம் இருந்தால் உங்கள் மகன் தமிழ்த் துறைத் தலைவராகவேகூட வரலாம். அதுதான் 'ரிஸ்க்' இல்லாதது.''

'' நீங்க அப்படியெல்லாம் என்னைக் கைவிட்டுடக் கூடாது. என் மகனுக்கு நீங்க பி.காம் தந்தா பட்டம் பெற்றதும் எவரெஸ்ட் கூலர்ஸில் அவனுக்கு வேலை உறுதி. நான் தானே அந்த ஏ. ஸி. நிறுவனத்தின் எம்.டி..!''

''ஓ, அப்படியா ! என்ன வெய்யில் பார்த்தேளா. ஒரே புழுக்கம். சேச்சே ! ஒரு சொட்டு மழை? ஊஹூம். வெந்து புழுங்கறது.''

''ஏன் நீங்க சிரமப்படணும்? வீட்டிலே ஓர் அறையை ஏஸி பண்ணிடுங்களேன். நான் ஏற்பாடு செய்யறேன்.''

'' நீங்க இவ்வளவு வற்புறுத்தறச்ச நான் மறுக்கலை. பில்லை, மறக்காம அனுப்பிடுங்க.''

''அதுக்கென்ன பார்த்துக்கலாம். இந்த அட்மிஷன் விஷயம்.....''

''அதுக்கென்ன கவனிச்சுடலாம்!''

''குட்மார்னிங் சார் !''

''வாங்க, நான் என்ன செய்யணும், சொல்லுங்க !''

''என் மகனுக்கு இடம் வேணும், பிகாமிலே.''

''என்ன மார்க் வாங்கியிருக்கிறான்?''

''எதிலேயும்கணக்கா வாங்கியிருக்கிறான்; தேவைக்கு அதிகமாக ஒரு மார்க்குகூட வாங்கவில்லை. சோஷலிஸ ஜனநாயகத்திலே, கொள்கையளவிலே, சொத்தை அதிகமாகச் சேர்ப்பது பாவம் என்று கருதப்படுகிறது போல, மார்க்குகள் அதிகம் வாங்குவதும் பாவம் என்ற கணக்கிலே பையனே பேசுகிறான். அவன் குறைத்து வாங்கும் மார்க்குகள் அத்தனையும் வேறு யாரையோ கைதூக்கிவிடும் என்பதாக நம்புகிறான். அவன் சொல்வதிலும் உண்மை இல்லாமல் போகலையே !''

''வாஸ்தவம்தான். உங்களுக்கு என்ன உத்தியோகம் ?''

''முதுமலையில் காட்டிலாகா அதிகாரி.''

''ஓ, அப்படியா? அங்கே யானைகள் எல்லாம் கொழு கொழு என்று பிரமாதமாயிருக்குமே ?''

''ஓ, எஸ் ! ஏன் உங்களுக்கு ஒன்று வேணுமா ? நாளைக்கே அனுப்பித் தரேன்.''

''நீங்க இவ்வளவு தூரம் வற்புறுத்தும் போது மறுப்பேனா? யானை இருந்தாலும் ஆயிரம் பொன், இறந்தாலும் ஆயிரம் பொன் என்கிறது வசனம். எனவே, எந்த நாளும் அதற்கு மதிப்புக் குறையாது என்று ஆகிறது.''

அட்மிஷன் நிச்சயம் என்று உறுதிப்படுத்திக் கொண்டு காட்டிலாகா அதிகாரி போய்ச் சேர்ந்தார்.

பிரின்ஸிபாலுக்கும் இந்தச் சம்பவம் மறந்தே போய்விட்டது. திடீரென்று சில நாட்கள் கழித்து ஒரு யானையை வீட்டு வாசலில் பார்த்த போதுதான் அவர் விழித்துக் கொண்டார், 'அடடா! பழக்க தோஷத்தில் எத்தனை பெரிய தவறு செய்துவிட்டோம்' என்று! 'அரிசியும், ஏ.ஸி.யும், இரும்பு பீரோவும், சோபா செட்டும் கேட்டது போல் யானையையும் கேட்டுவிட்டோமே ! யானையைக் கட்டி எப்படித் தீனி போடுவது?' என்று மலைத்துப் போனார். அசந்தர்ப்பத் தும்பிக்கை ஆழ்வார் மெலிந்து கொண்டே வந்தார் ! இருளைத்தியிடம் இப்போதெல்லாம் யாரும் சிபாரிசுக்குப் போவதில்லை. '' என்னிடம் ஒரு யானை இருக்கிறது. அதை ஓட்டிப் போனால் நிச்சயம் ஸீட் தருகிறேன்'' என்கிறார். யார் அணுகுவார்கள் அவரை ?






# தங்கத்திலே வைரம்



ஒவ்வொரு விஷயத்திலும் சதா போட்டி போடும் இரு பெண்கள், இரு சகோதரர்களை மணந்து அங்கும் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் போட்டி போட்டுச் சகோதரர்களைப் பிரித்துக் கடைசியில் ஒன்றுசேர்த்து வைத்து....ஒரே கூத்துத்தான் போங்கள் !

போட்டியிடும் பெண்கள் ஜெயசித்ராவும், ஸ்ரீப்ரியாவும்; கல்லூரி மாணவிகளாயிருக்கும் போதே ஒருவர் மீது ஒருவர் பொறாமை கொண்டு போட்டி மேல் போட்டியிட்டு மிகவும் சுவாரசியமாகப் படத்தை ஆரம்பித்து வைக்கின்றனர். இருவரிடமும் துடிப்பும் வெடிப்பும் கொண்ட பேச்சோடு நல்ல நடிப்பையும் காண முடிகிறது. 'பாப் மியூஸிக்' பாடகர்களான தங்கள் கணவன்மார்களை ஒன்றுசேர்த்து வைக்க அவர்கள் எடுத்துக் கொள்ளும் ஒவ்வொரு முயற்சியும் தமாஷ்தான். எந்த முயற்சியும் வெற்றியடையாமல் போகவே, கடைசியில் இருவரும் படுக்கையறைப் போராட்டத்தைத் தொடங்கித் தங்கள் கணவன்மார்களைப் பணிய வைக்கத் தீர்மானிக்கின்றனர். அந்த முயற்சியில் அவர்கள் தோல்வி அடைகின்றனர். ஒருவரை ஏமாற்றி இன்னொருவர் கணவனிடம் போக முயலும்போது கொட்டகையில் பலத்த கையொலி எழுகிறது !

ஆரம்பத்தில் இருந்த வேகம், இடைவேளைக்குப் பிறகு குறைந்துவிடுவது ஒரு பெரிய குறை.

சிவகுமார் அண்ணன் ; கமலஹாஸன் தம்பி. இருவருமே சிறப்பாக நடித்திருக்கின்றனர் என்றாலும், கமலஹாஸன் அதிக மார்க்குகளைப் பெறுகிறார். அவர் நடிப்பில் காணும் ஓர் இளமைத் துடிப்பு இளம் தலைமுறையினருக்கு நல்ல உற்சாகத்தை அளிக்கும். அத்துடன் அவர் நடிப்பில் காணும் யாரையும் 'காப்பி'யடிக்காத சுயேச்சையான தன்மையும், கவர்ச்சியும் திருப்தி அளிக்கின்றன. கமலஹாஸன் இதை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

இரு சகோதரர்களின் தந்தையாக வரும் தேங்காய் சீனிவாசன் பாடுபட்டு நன்றாய் நடிக்கிறார் என்றாலும் ஆர்ப்பாட்டத்தையும், மிரட்டல் உருட்டல்களையும் கொஞ்சம் குறைத்துக் கொண்டால் நன்றாயிருக்கும். அத்துடன் இன்னொரு 'அப்பா நடிகரை' நம் நினைவுக்குக் கொண்டு வரவேண்டாமே !

கதையென்று சொல்லும்படியாக இப்படத்தில் எதுவும் இல்லையென்றாலும் பல சுவையான நிகழ்ச்சிகளைப் புகுத்திச் சுவையூட்டியிருக்கிறார்கள். அதற்காக, திரைக் கதை, வசனம் எழுதியிருக்கும் சொர்ணத்தைப் பாராட்டலாம். படத்தின் டைரக்டரும் அவர்தான். அந்தப் பணியையும் நன்றாகவே நிறைவேற்றியிருக்கிறார்.

படத்தில், தலைப்பின் பொருத்தத்தைத் தேடித் திண்டாடாதீர்கள். படத்துக்கு எப்படியும் ஒரு பெயர் வேண்டுமல்லவா? அவ்வளவுதான்! அத்துடன் விடுங்கள்! —காந்தன்

x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x

ஹோட்டல் வாசலில் கேட்டது:

"ஏங்க நீங்கதான் மன்னார்குடி மன்னார் சாமியா?"

"இல்லையே."

"அப்ப சரி, உங்க கையிலிருக்கும் குடை என்னுது தான். ஏன்னா நான்தான் மன்னார்குடி மன்னார்சாமி!"



# சீசன் சிரிப்பு



கட்ட பொம்மன் இப்போது பேசும் வசனம் :

வானம் பொழியவில்லை, பூமி விளையவில்லை, உனக்கு ஏன் கொடுப்பது வரி? எங்களுடன் டம்பு செட் போட வந்தாயா? கிணற்றிலே தூர் எடுக்க வந்தாயா? மானங்கெட்டவனே !

பள்ளிக் கூடம், கலைக்கல்லூரி, சட்டக்கல்லூரி வைத்தியக் கல்லூரி முதலியவற்றுக்கு அட்மிஷன் வேண்டுமா? உடன் அணுகுங்கள் நாமம் அண்டு கோ. மூர் மார்க்கெட் பின்புறம். போலி நபர்களைக் கண்டு ஏமாறாதீர்கள்....

டிங்! டிங்!







''பன்னீர் தெளிக்கிறதுதான் தெளிக்கிறீங்க. கொஞ்சம் நல்லாத் தெளிக்கக் கூடாதா?''

''இந்தச் சாக்கில் நீர் குளிச்சிட்டுப் போகலாம்னு பார்க்கிறீரோ? போங்காணும்!''

'' கண்ணா ! ஏன் சோகமாக இருக்கிறாய்?''

''வெய்யிலில் இந்த ஆறுமட்டும் வற்றாமல் இருந்தால் நீங்கள் குளிக்கும்போது உங்கள் ஆடைகளை எடுத்துக் கொள்ளலாம் என்று எண்ணி யிருந்தேன்!''



கருத்து, படம்,



''மழை இல்லாததாலே முன்னுலே மாதிரி எனக்கு இப்போ ஜலதோஷம் பிடிக்கிறதில்லே!''






''என்ன வாத்தியாரே! உன் பையனுக்கு காலேஜ் அப்ளிகேஷன் ஃபாரம் கிடைச்சுதா?''

''அது மட்டுமா கிடைச்சுது? கூட்டத்திலே பூந்ததிலே ஐந்து பேனுவும் பத்து பர்ஸும் கிடைச்சுது நயினு!''



''ஏண்டா, பழைய புத்தகத்துக்கு அட்டை போட்டுண்டிருக்கே?''

''என்னப்பா.... தெரிஞ்சுக்கிட்டே கேக்கறியே?''

''எப்போ ஸ்கூல் திறக்கும்னு காத்திண்டிருக்கேன்! உபத்திரவம் தாங்க முடியவில்லே.''



மாணவர்கள் கவனத்துக்கு:

① கண்ணைக் கவரும் வகுப்பு அறைகள்.

② காதுக்கினிய பாடங்கள்.

③ கண்ணியம் மிக்க ஆசிரியர்களால் நடத்தப்படும் "ஜில் ஜில்" கல்லூரி.

இடத்துக்கு முந்துங்கள்!





# கண்ணதாசன்

## அது ஒரு வரம்

மனிதனிடமுள்ள அத்தனை குணங்களும் உலகில் உள்ள எல்லாஜீவராசிகளுக்குமுண்டு. மனித வர்க்கத்துக்குத் தெரிந்த இரண்டே விஷயங்கள் மட்டும் அவற்றுக்குத் தெரியவில்லை.

ஒன்று பேசுவது; மற்றொன்று சிரிப்பது.

நகைச்சுவை உணர்ச்சி மனிதனுக்கு இறைவன் கொடுத்த தனி வரம்.

சிரிக்கின்ற முகம் அழகாக இருக்கிறது.

மங்கையர் அணியும் நகைகளைப் போல், அந்த அலங்காரமும் ஒரு நகை.

அதனால்தான் அந்தச் சுவைக்கு 'நகைச் சுவை' என்று பெயர்.

சிரிப்பிலே பலவகை உண்டு. ஒவ்வொன்றுக்கும் அர்த்தம் உண்டு.

அழகிய பெண்ணின் சிரிப்பு சில நேரங்களில் காதலைக் குறிக்கும்; சில நேரங்களில் வெற்றியைக் குறிக்கும்; சில நேரங்களில் குழப்பத்தை ஏற்படுத்தும். பொதுவாக அவளது அழகுக்கு அழகூட்டும்.

கலைவாணர் என். எஸ். கே. அவர்கள் ஒரு நாடகத்தில் நடித்துக் கொண்டிருந்தார்கள். அந்தச் சரித்திர நாடகத்தில் வந்த சக்கரவர்த்தி தமக்கு எந்தெந்த ராஜாக்கள் கப்பம் கட்டினார்கள் என்று மந்திரியைக் கேட்டார்.

'வங்க ராஜா, தங்கம் கட்டினார்; கலிங்க ராஜா நவமணிகள் கட்டினார்' என்றெல்லாம் அந்த மந்திரி அடுக்கினார்.

உடனே சக்கரவர்த்தி, 'சோழ ராஜா என்ன கட்டினார்?' என்று கேட்டார்.

வேலைக்காரனாக நின்ற என். எஸ். கே. 'வேஷ்டி! வேஷ்டி!' என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

தஞ்சை மாவட்டத்தில் ஒரு மடாதிபதி புலவர்கள் கூட்டத்தைக் கூட்டினார். மடாதிபதியே தலைமை வகித்தார். எல்லாப் புலவர்களும் வந்து விட்டார்கள். 'கடைமடை' என்ற ஊரிலிருந்து ஒரு புலவர் 'கடை'சியாக வந்தார். அவரைப் பார்த்த மடாதிபதி, ''வாரும் கடைமடையரே!'' என்றார். அப்படி என்றால் 'கடைமடை' என்ற ஊரைச் சேர்ந்தவர் என்றும் அர்த்தம்; கடையில் வந்த மடையன் என்றும் அர்த்தம்.

உடனே புலவரும் பணிவோடு, ''வணக்கம் மடத் தலைவரே!'' என்று கூறிவிட்டு அமர்ந்தார்.

**காக்காய் கறி சமைத்து**
**கருவாடு மென்று தின்பர் சைவர்**

என்றார் ஒரு புலவர்.

''சைவர் கருவாடு தின்பதாவது?'' என்று சந்தேகப்படுகிறீர்களா? அதற்கு அர்த்தம் இதுதான்:

'கால் காயைக் கறியாகச் சமைத்துத் தமது கரு வாடும் என்று தின்பார்கள் சைவர்கள்'.

இப்படி எவ்வளவோ உதாரணங்கள் சொல்லலாம். இதற்கு, தமிழில் 'சமத்காரம்' என்று பெயர்.

சபையிலே பேசும்போது நிம்மதி இல்லாமல் உட்கார்ந்திருக்கும் ஜனங்களை நிமிர்ந்து உட்கார வைப்பது சிரிப்பு.

அண்ணாவுக்கு அது கைவந்த கலை.

மற்றும் சில அரசியல் தலைவர்களும் உண்டு.

ஆனால் சிரிப்பைப் பற்றிப் பாடுகிற கவிதைகள் எல்லாம் பெண்ணின் சிரிப்பையே பெரிதாகக் காட்டி யிருக்கின்றன.

அந்தச் சிரிப்பு யுத்தங்களை உண்டாக்கி இருக்கிறது; சாம்ராஜ்யங்களை அழித்திருக்கிறது; அறிஞர்களை மூடர்களாக்கி யிருக்கிறது; சகல கலாவல்லவர்களைக்கூட ஏமாளியாக்கியிருக்கிறது.

துரியோதனனின் வஞ்சகத்துக்குப் பாஞ்சாலியின் சிரிப்புத்தானே காரணம்!

மாதவியின் சிரிப்புத்தானே சிலப்பதிகாரத்தை நடத்திச் செல்கிறது!

கிளியோபாத்ராவின் சிரிப்புத்தானே ரோம் சாம்ராஜ்யத்தைச் சீர்கெடுத்தது!

சிரிப்பு நோய் தருகிறது; அதுவே மருந்தும் தருகிறது.

முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு கன்னி என்னைப் பார்த்துச் சிரித்தாள். அதன் பின்பு ஆயிரக் கணக்கான சிரிப்புக்களை நான் சந்தித்திருக்கிறேன். ஏனோ அந்த முதல் சிரிப்பு மட்டும் என் நினைவில் இருக்கிறது.

காரணம்: அதில் எனக்குத் தேவையான அர்த்தம் இருந்தது.

எனது முதல் கதையைப் பிரசுரிக்கும்படி ஒரு பத்திரிகை ஆசிரியரிடம் கொடுத்தேன்; அவர் ஏளனமாகச் சிரித்தார்.

இரண்டாண்டுகளுக்கு முன்பு என்னைச் சந்தித்தபோதும் சிரித்தார்.

இரண்டுக்கும் இடையில் எவ்வளவு வித்தியாசம்!

வீடு கலகலப்பாக இருக்கிறதென்றால் எல்லாரும் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று பொருள். அதுபோல் நாடும் கலகலப்பாக இருக்க வேண்டாமா?

ஆனந்தமாக எல்லோரையும் சிரிக்க வைக்கக்கூடிய ஒரு நல்ல அரசாங்கத்தை நாம் எதிர்பார்ப்போமாக.

காந்தியடிகள் விரும்பிய ராமராஜ்யம் அதுதான்.

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# காலைப்புத்துணர்ச்சியும் நறுமணமும் நாள் முழுதும் திகழட்டும்!

குளிர்ந்த நீரில் குளித்த புத்துணர்ச்சியை நிலைக்க வைக்கிறது-பல மணி நேரங்களுக்கு. ஆம், பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் நாள் முழுதும் உங்களை அவ்வண்ணம் திகழச் செய்கிறது. அங்கம் முழுதும் பூசிக்கொள்ளுங்கள். இது பொலிவுடனும், சுத்தமாகவும், குளுமையுடனும் வைக்கிறது. இதன் இதமான நறுமணம் நிலைத்திருக்கிறது. ஈரத்தை உறிஞ்சி உலர்ந்த நிலையில் வைத்து சுகப்படுத்துகிறது. கோடைகாலங்களில் வியர்வையின் துர்நாற்றத்தைப் போக்குவதுடன், 'பிசுக்' என்று ஒட்டுவதைத் தடுக்கிறது. பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் பட்டுப்போன்று இருப்பதால் அதை முகத்தில்கூட பூசிக் கொள்ளலாம்.

## பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்

மீடியம், ஃபேமிலி மற்றும் இப்போது புதிய 196 கிராம் லார்ஜ் சைஸ்களில் கிடைக்கிறது






சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பெற்றது.)

HT-CP-834

REGISTERED No. M. 4592
Registered as a Newspaper in Ceylon